# ஸ்ரீ ராமாநுஜன் 153, 154.

சென்னை ஸத்க்ரந்தப்ரகாசன ஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீ காஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 13 | 25—10—1961<br>பிலவ-ஸூ ஐப்பசி-மீ | ஸஞ்சிகை 9, 10. |
|---|---|---|


## திருவாய்மொழி நூற்றந்தாதி பா—43

மாசறுசோ திக்கண்ணன் வந்துகல வாமையால் *
ஆசை மிகுந்துபழிக் கஞ்சாமல்—ஏசறவே *
மண்ணில் மடலூர மாற னொருமித்தான் *
உண்ணடுங்கத் தான்பிறந்த வூர்.

| | | | |
|---|---|---|---|
| மாசு அறு சோதி- | நிர்மலமான சோதியையுடைய | ஏசு அற | ஏசுமெல்லைகடந்து |
| கண்ணன் | எம்பெருமான் | | |
| வந்து | நெருங்கிவந்து | தான் பிறந்த ஊர் உள் நடுங்க | தாம்பிறந்த திருநகரியிலுள்ளா ரெல்லாரும் நடுங்கும்படியாக |
| கலவாமையால் | ஸம்ச்லேஷியாமையினாலே | | |
| மாறன் | ஆழ்வார் | | |
| ஆசை மிகுந்து | ஆசைமீதூரப்பெற்று | மண்ணில் | இவ்வுலகத்திலே |
| பழிக்கு அஞ்சாமல் | (ஊரார் தாயார் முதலானோருடைய) பழிக்குப் பின்வாங்காமல் | மடல் ஊர ஒருமித்தான் | மடலூருகையிலே முயன்றார். |

*** கீழ் * பொலிக பொலிக வென்னும் பதிகத்திலே * மலியுஞ்சுடரொளிமூர்த்தி மாயப்பிரான் கண்ணன் தன்னை * என்று வடிவழகையும் திருக்குணங்களையும் ஸௌலப்யத்தையும் அநுஸந்தித்து இப்படிப்பட்ட எம்பெருமானோடே ஸம்ச்லேஷிக்கப் பெறவேணுமென்று கோலிக் கையை நீட்ட, அப்பெருமான் அகப்படாதே கைகழிந்து நிற்க, அத்தாலே கலங்கி மடலெடுக்கையிலே மனஞ் செலுத்தினாராழ்வார் என்றவாறு. "ஏசறவே" என்றவிடத்து "ஏசவே" என்றும் பாடமுண்டென்று வியாக்கியானத்திற்காண்கிறது. அதுவுமொக்கும்; தனை பிறழாது. ஏசும்படியாக வென்கை.

இப்பாட்டுக்கு மூலமான மாசறுசோதித்திருவாய்மொழி மடலூரவொருப்படுவதாயிருக்கும். கீழ் நாலாமபத்திலே *ஏறாளுமிறையோனு மென்கிற திருவாய்மொழியில் உண்டாயிருந்த காதலே மீண்டும் கிளர்ந்து எம்பெருமானோடு ஸம்ச்லேஷிக்க விரும்பி அந்த விருப்பம் நிறைவேறப்பெறாமையினாலே மடலூர்வேனென்று அச்சமுறுத்திக் காரியங் கொள்ளப் பார்க்கிறார். மடலெடுக்கையென்று தமிழிலே ஒரு முறைமையுண்டு. நாயகன் வேட்டைக்குப் புறப்பட்டானாய் நாயகியும் தோழியும் பூக்கொய்து விளையாடவென்று புறப்பட்டவளவிலே ஒரு வியாஜத்தாலே தோழியும் பிரிந்த ஸமயத்திலே நாயகனும் தெய்வவசமாக அங்கே வந்து சேர, அங்கே அவனோடு கண்கலவியே கூட்டக்கூடி ஊழ்வினை பிரித்தலால் உடனே பிரியவும் நேர்ந்திட, அந்தப் பிரிவைப் பொறுக்கமாட்டாத நாயகி அவனோடு கூடுதற்காகச் செய்யும் ஸாஹஸ ப்ரவ்ருத்திதான் மடலூர்தல் எனப்படுவது.

நாயகனை ஒரு படத்திலேயெழுதி, வைத்தகண்வாங்காமல் அதனைப் பார்த்துக்கொண்டு புஷ்பம் சந்தனம் முதலிய போக்யவஸ்துக்களையும் விஷமாக உதறித் தள்ளி ஊணும் உறக்கமும் உடம்பு குளிப்பதுமின்றியே, பனைமடலைக் கையிலே ஏந்திக்கொண்டு அதனால் உடம்பை மோதிக்கொண்டு தலைமயிரை விரித்துக்கொண்டு இன்ன படுபாவி என்னைக் காக்கமாட்டாதே கைவிட்டான்; அவன் கண்ணற்றவன்; அவனினும் விஞ்சிய கொடியன் இல்லை' என்று தெருவேறக் கதறிக்கொண்டே கேட்டாரெல்லாரும் நடுங்கும்படியும் இரங்கும்படியும் திரிந்துழல்வதுதான் மடலூருகையாவது. இது தமிழர் தெரிவிக்கும் மரியாதை.

இங்ஙனம் கதறிக்கொண்டு தெருவிலே புறப்படுவதற்கு ப்ரயோஜனம் யாதெனில்; இந்த ஸாஹஸ ப்ரவ்ருத்தியைக்கண்டு ராஜாக்களாயுள்ளவர்கள் இவ்வார்த்தையைப் பொறுக்க மாட்டாத கருணையினாலே இருவரையும் கூட்டிவைப்பர்கள்; பழிக்கு அஞ்சி நாயகனேயாவது வந்து கூடுவன்; இவையொன்றுமில்லையாகில் நாயகிதான் முடிந்து பிழைத்துப் போவள்; இவையாயிற்று மடலூர்தற்குப் பிரயோஜனங்கள்.

ஆழ்வார் இப்படி எம்பெருமானைப் பழித்துக்கொண்டு ஸாஹஸம் தோற்றத் தெருவிலே கிளம்பினாரோ? எனில்; இல்லை; மடலூர்வன் என்று சொல்லி அச்சமுறுத்தின மாத்திரமேயன்றி அதை முடிய நடத்தினபாடில்லை. "தோழீ! உலகு தோறலர் தூற்றி ஆம் கோணைகள் செய்து குதிரியாய் மடலூர்துமே" என்றும், 'யாம் மடமின்றித் தெருவுதோறயல் தையலார் நாமடங்காப் பழிதூற்றி நாடுமிரைக்கவே யாம் மடலூர்ந்தும் எம்மாழியங்கைம் பிரானுடைத் தூமடல் தண்ணந்துழாய் மலர்கொண்டு சூடுவோம்" என்றுமுள்ள பாசுரங்கள் காண்க. திருமங்கையாழ்வாரும் "பெருந்தெருவே ஊராரிகழினு மூராதொழியேன் நான், வாரார்பூம் பெண்ணை மடல்" என்றும் "உலகறியவூர்வன் நான் மன்னியபூம் பெண்ணை மடல்" என்றும் மடலூர்வதாகச் சொல்லி அச்சமுறுத்தினவத்தனையேயுள்ளது.

இத்திருவாய்மொழி ஆழ்வார் தாமான தன்மையிலே யிருந்து பேசுகிற தன்று; நாயகி ஸமாதியிலே நின்று பேசுவதாகும். தம்முடைய ஆசையின் மிகுதியைக் காட்டுவதே இத்திருவாய்மொழியின் உள்ளுறையாகும்.

"எம்பெருமான் தனக்குத் திருவுள்ளமானபோது நம்மை நோக்கியருள்வன், நாம் பதறவொண்ணாது" என்று அநுஸந்தித்து ஆறியிருக்கவேண்டியதன்றோ ஸ்வரூபம்; அங்ஙனமிராமல் தாம் பதறி ஒரு அதிப்ரவ்ருத்திசெய்ய நினைக்கைதானும் அவத்யமன்றோ? அதிலும் ப்ரபந்நஜந கூடஸ்தரான ஆழ்வார் இப்படி மடலூர்வேனென்றல் பொல்லாங்கன்றோ? என்னில்; அன்று; ப்ராப்ய வஸ்துவில் ப்ராவண்யாதிசயத்தினால் உண்டாகிற ப்ரவ்ருத்தியேயன்றி எம்பெருமானுக்குக் கெடுதலை விளைக்கவேணுமென்கிற கெட்ட எண்ணத்தினாலுண்டாகிற ப்ரவ்ருத்தியல்ல; ப்ரேமபரவசர்க்கு இது அவத்யத்தை விளைக்கக் கூடியதன்று. 'ஞானங்கனிந்தநலம்' என்றபடி ஜ்ஞாநபரிபாக ரூபமான பக்தியின் காரியமாக ஸம்பவிக்கின்ற ப்ராப்தாப்ராப்த விவேக விரஹத்தால் வரும் ப்ரவ்ருத்தி விசேஷங்கள் எல்லாம் மிகவும் ஆதரிக்கத்தக்கனவேயாம். கருமமடியான அஜ்ஞானத்தினால் வருமவையே ஹேயம் என்று கொள்ளக்கடவது.

ஆனாலும், சேதனனிடத்து ஒருவகையான ப்ரவ்ருத்தியையும் ஸஹியாத ஸித்தோபாயத்தின் கார்யகரத்வத்திற்கு இந்த அதிப்ரவ்ருத்தியானது இடையூறாகமாட்டாதோ வென்னில்; இந்த அதிப்ரவ்ருத்திதானும் ஸித்தோபாயமான எம்பெருமான் பண்ணின க்ருஷியின்

பயனெனக் கருதத்தக்கதாம். "பேரமர் காதல் கடல்புரைய விளைவித்த காரமர்மேனி நங்கண்ணன்" என்று இப்படிப்பட்ட அதிப்ரவ்ருத்திக்கு ஹேதுவான பக்தியைப் பிறப்பிக்குமவனும் வளரச் செய்பவனும் அவ்வெம்பெருமான்றானேயன்றோ சொல்லப்பட்டுள்ளது. ஆகையாலே பக்திபாரவச்ய ப்ரயுக்தமான இந்த அதிப்ரவ்ருத்தி உபாயஃபலமென்று பூர்வாசார்ய ஸித்தாந்தம்.

அன்றியும், பலனைக் கடுகப்பெறவேணுமென்ற விரைவின் மிகுதியினால் கண்ணுஞ் சுழலையிட்டு இத்தலைபடுகிற அலமாப்பெல்லாம் 'நம்மையாசைப்பட்டு இங்ஙனம் துடிக்கப் பெறுவதே!' என்று அவன் திருமுகம் மலருகைக்கு உறுப்பாகையால் இத்தகைய அதிப்ரவ்ருத்திகளெல்லாம் அவனுடைய முகமலர்த்திக்காகப் பண்ணும் கைங்கர்யத்தோடொத்து உபேயத்தில் அந்தர்ப்பூதமாய் விடுமென்றே அறுதியிடத்தக்கதாம். .... .... (43)

## திருவாய்மொழி நூற்றந்தாதி பா—44

ஊர நினைந்தமடல் ஊரவுமொண் ணாதபடி *
கூரிருள்சேர் கங்குலுடன் கூடிநின்று—* பேராமல்
தீதுசெய்ய, மாறன் திருவுள்ளத்துச் சென்றதுயர் *
ஓதுவதிங் கெங்ஙனே யோ.

| | | | |
|---|---|---|---|
| ஊர நினைந்த மடல் | தாம் ஊர்வதாக நினைத்திருந்த மடலை | பேராமல் | தொலையாமல் |
| ஊரவும் ஒண்ணாதபடி | ஊரமுடியாதபடியாக | தீது செய்ய | உபத்திரவம் செய்ய (அதனால்) |
| கூர் இருள் சேர் கங்குல் | மிகுந்த இருள் செறிந்த இரவானது | மாறன் | ஆழ்வாருடைய |
| உடன் கூடி நின்று. | தன் பரிவாரத்தோடு சேர்ந்து நின்று | திரு உள்ளத்து | திருவுள்ளத்திலே |
| | | சென்ற துயர் | நிகழ்ந்த துயரத்தை |
| | | இங்கு ஓதுவது | இங்கு எடுத்துரைப்பதானது |
| | | எங்ஙனே ஓ | எப்படி முடியும்? |

*** கீழ் * மாசறுசோதிப்பதிகத்திலே மடலூருவதாக வொருப்பட்ட ஆழ்வார் அங்ஙனம் மடலூர முடியாதபடிக்கு இருள் செறிந்த இராப்பொழுதுவந்து இடையூறாக நின்றது அதுவுமல்லாமல் மிக்க துன்பத்தையுமுண்டுபண்ணிற்று. அதனால் துன்பமுற்ற ஆழ்வாருடைய நிலைமை வாய்கொண்டு பேசவொண்ணாதபடியாக * ஊரெல்லாந் துஞ்சிப் பதிகத்திலே நிகழ்ந்த தென்கை.

கீழ்த்திருவாய்மொழியாகிய மாசறுசோதியிலே மடலூரும் முயற்சி வலிதாய்ச் சென்றது. மடலூரவேண்டுமானால் நாயகனை ஒரு படத்திலே எழுதவேணுமே; அப்படி எழுதுவதற்கு அவகாசமில்லாதபடி கங்குலிருள்வந்து புகுந்தது. * ஆழியாலன்றங்காழியை மறைத்தான் * என்றும் * ஆழிகொண்டன்று இரவி மறைப்ப * என்றும் சொல்லுகிறபடியே பண்டு பாரதப்போரிலே ஜயத்ரதனுடைய வதத்திற்காக ஸூர்யனை அஸ்தமிக்கச்செய்தது போல் இப்போதும் அப்பெருமான் தானே ஸூர்யனைஅஸ்தமிக்கும்படி பண்ணினான் போலும். இவள் மடலெடுத்தால் அது தனக்கு அவத்யமாகுமென்று நினைத்து அதற்கு இடையூறு செய்ய வொருப்படுவனே யெம்பெருமான். அல்லது தைவயோகத்தாலே அஸ்தமித்ததாகவும் இருக்கலாம். இரவு வந்து புகுந்தது. அதுதான் அந்தியம்போதன்றிக்கே சராசரங்களெல்லாம் ஒடுங்கும்படி நடுநிசியாயிருந்தது. பழிசொல்லுவாரோடு ஹிதஞ்சொல்லுவாரோடு வாசியற எல்லாரும் உறங்கிப்போய் உசாத்துணையற்றிருந்தது. இவ்வளவிலே ஸர்வரக்ஷகனான எம்பெருமானுடைய திருக்குணங்களை யநுஸந்தித்தாராழ்வார். இவ்வநுஸந்தானம் ஸம்ச்லேஷ தசையிலன்றிக்கே விச்லேஷ தசையிலேயாகையாலே மிகவும் ஆற்றாமைக்கு உறுப்பாயிற்று. அசோகவனத்திலே முடியத்தேடின பிராட்டியைப் போலே இவர்க்கும் முடியவேண்டியவளவாயிற்று. அந்த அவஸாதமெல்லாம் இத்திருவாய்மொழியாய் வெளிவருகின்றது. கீழ்த்திருவாய்மொழிபோலே இத் திருவாய்மொழியும் நாயகி ஸமாதியாலே அருளிச்செய்கிறபடி. ... .... ... (44)



பிலவஸ்ரீ ஆவணித்திங்கள் ஸ்வாதீ நக்ஷத்திரத்தில் (14—9—61) ஷஷ்டியப்தபூர்த்தி மஹோத்ஸவம் கண்டருளின ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதிபயங்கரம் காதி ஸ்வாமியின் தேவப்பெருமாள் ஸன்னிதி மங்களாசாஸனக் காட்சிகள்.

# உபயவேதாந்த மணித்திரள்கள்.

— முன் தொடர்ச்சி —

## 3. வடமொழி வேதாந்தமணி.

சென்ற விதழில் வெளியிட்ட முதல்மணியின் முடிவில்—"இந்த ப்ரஸ்தாவத்தில் * அஸந்நேவ ஸ பவதீத்யாதி தைத்திரீயோபநிஷத்வாக்யம் நினைவுக்கு வந்து ஶங்கையுமுண்டாகும்; அதைப்பற்றி அடுத்த இதழிற் பேசுவோம்" என்றோம். அது இப்போது பேசப்படுகிறது.

தைத்திரீயோபநிஷத்தில்—

"அஸந்நேவ ஸ பவதி । அஸத் ப்ரஹ்மேதி வேத சேத் ॥
அஸ்தி ப்ரஹ்மேதி சேத்வேத । ஸந்தமேநம் ததோ விது: ॥"

என்று ஆனந்தவல்லியின் ஆறுவது அநுவாகம் தொடக்கத்தில் ஓதப்படுகின்றது. உத்பத்தி விநாசங்கள் சரீரத்திற்கு உண்டேயொழிய ஆத்மாவுக்குக் கிடையாதென்று வேதாந்த ஸித்தாந்தமாயிருக்க, இந்த ருக்கில் ஆக்மாவுக்கு உத்பத்தி விநாஶங்கள் உள்ளதுபோல் தெரிவிக்கப்படுகிறதே; அது எப்படி பொருந்தும்! என்பது ஶங்கை. உதாஹரித்த ருக்கின் பொருளாவது, [ப்ரஹ்ம அஸதிதி வேத சேத், ஸ: அஸந்நேவ பவதி—ப்ரஹ்ம அஸத் இதி வேத சேத், ஸ: அஸந் ஏவ பவதி.] எந்த ஜீவன் பரஹ்மம் இல்லையென்று அறிகிறானோ அந்த ஜீவன் இல்லாதவனாகிறான் என்று இந்த வாக்யத்திற்குப் பொருள்போல் தோன்றும்; இப்பொருள் பொருந்தாது. "ப்ரஹ்ம அஸத்" என்கிற ஜ்ஞாநாகாரம் ஸம்பவிக்கமாட்டாது. "ஶஶவிஷாணம் அஸ்தி; வந்த்யாஸுத: அஸ்தி" என்கிற ஜ்ஞாநாகாரம் எப்படி தேறமாட்டாதோ, அப்படியே "ப்ரஹ்ம அஸத்" என்கிற ஞாநாகாரம் அஸம்பாவிதம். ஆகவே இங்குப் பொருள் கொள்ளவேண்டிய விதம் யாதெனில், 'அஸத்' என்றவிடத்திலுள்ள நஞ்ஞை யெடுத்து (வேத) என்பதில் சேர்த்துக்கொண்டு [ப்ரஹ்ம ஸதிதி ந வேத சேத்—ப்ரஹ்ம ஸதிதி ந வேத சேத்] என்னவேணும். ப்ரஹ்மஸத்தாஜ்ஞானத்தாலே மோக்ஷமும், அந்த ஜ்ஞானமின்மையினால் ஸம்ஸாரமுமாகும் என்பதே இந்த வாக்யத்தின் கருத்தாம். பரப்ரஹ்மத்தை ஒருவன் தெரிந்துகொள்வதானது அதனுடைய ஸ்வரூபரூபகுண விபூதி சேஷ்டிதங்களை விஶதமாகத் தெரிந்து கொள்வதுதான்; ஆனால் அஃது ஒருவர்க்கும் ஸாத்யமன்று. தைத்திரீய ப்ராஹ்மணத்தில் இரண்டாவது அஷ்டகம் எட்டரம் பிரச்நம் ஒன்பதாம அநுவாகத்தில் "அஸ்யாத்யக்ஷ: பரமே வ்யோமந் । ஸோ அங்க வேத யதி வா ந வேத." என்று ஓதப்பட்டுள்ளது. அந்த ஸர்வேச்வரன் தானும் தன் பெருமையை அறிந்தானோ இல்லையோவென்று வேதபுருஷன் ஸந்தேஹப்படாநிற்பதாக இதிற் சொல்லப்படுகிறது. பட்டர் இதை ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் பதினைந்தாம் ச்லோகத்தி லெடுத்துக் காட்டியுள்ளார். ஆழ்வார்களோவென்னில், "தனக்கும் தன்தன்மையறிவரியான்" என்றும் "தாம் தம் பெருமையறியார்" என்றும் நிஸ்ஸந்தேஹமாகவே யருளிச் செய்கிறார்கள். இப்படி ஸர்வஜ்ஞனை எம்பெருமானே அறிய அஶக்தனென்னும்போது அறிவிலிகளும் அல்பஜ்ஞர்களுமான நம்போலியர்கள் அறிவதற்கு ப்ரஸக்தியே யில்லை. உட்புகுந்து விஶதமாக உணர முடியாமற்போனாலும் 'ப்ரஹ்மமுள்ளது' என்று ஸாமாந்யமாக வுணரலாமன்றோ; இவ்வுணர்ச்சியுமில்லாதவன் மோக்ஷப்ராப்தி யோக்யனன்றிக்கே ஸம்ஸாரியாயுழல்கிறான் என்றதாயிற்று.

இனி * அஸ்தி ப்ரஹ்மேதி சேத் வேத * இத்யாதியான உத்தர வாக்யத்தினுல்—ப்ரஹ்ம ஜ்ஞானமுள்ளவன் ஸம்ஸாரத்தில் நின்றும் விடுபட்டு முக்தனுகிறுனென்கிறது. ஆக, ஜீவாத்மாவுக்கு அஸத்தையாவது ஸம்ஸாரித்வம்; ஸத்தையாவது — முக்தத்வம் என்றதாயிற்று. இவ்வர்த்தத்தைத் திருமழிசைப்பிரான் திருச்சந்தவிருத்தத்தில் "அன்று நான் பிறந்திலேன் பிறந்தபின் மறந்திலேன்" என்கிற பாசுரத்தினுல் ஒருவாறு காட்டியருளினுராகிறுர். முக்திக்கு அர்ஹனுயிருக்குந் தன்மையும் முக்தத்வமாகக் கொள்ளக்கடவது.

இந்த * அஸந்நேவ * இத்யாதி உபநிஷத் வாக்யத்தை மணவாளமாமுனிகள் தமது ரஹஸ்ய வியாக்கியானங்களில் கையாண்டு அர்த்த வைஶத்யம் காட்டியருளியிருக்கிறபடியை இனி விவரிப்போம். இதர ஆசாரியர்கள் எது எழுதியிருந்தாலும் மணவாளமாமுனிகளின் திருக்கைத்தலத்திலிருந்து அவதரித்த திவ்யஸூக்தியினுல் விளையும் தெளிவும் ஆனந்தமும் அப்ரமேயமென்பதை அநஸூயுக்களுக்கு நினைப்பூட்டுகிறேும்.

ஆசார்யஹ்ருதயத்தில் (11.) "இவை கிட்டமும் வேட்டுவேளானும் போலே" இத்யாதி சூர்ணையின் வியாக்கியானத்தில்—அசித்ஸம்பந்தம் ஆத்மாவுக்கு ஸத்தாஹாநியையுண்டாக்குமென்னும்போது "* அஸந்நேவ ஸ பவதி யென்கிறபடியே, விலக்ஷண ஜ்ஞாந குணகமாய் ஸ்வயம் ப்ரகாஶமான வஸ்துவென்று இதின் சீர்மைபாராதே ஜ்ஞான லோபமறத் தின்று ஸத்தாஹாநியைப் பண்ணும்;........* ஸந்தமேநம் ததோ விது: என்று பகவத் ஜ்ஞாநாநந்தரம் ஆத்மஸத்தாஸித்தியாகச் சொல்லிற்றிறே."

அதிலேயே (87.) * அணையவூரப்புனைய * இத்யாதி சூர்ணையின் வியாக்கியானத்திலே—"* பெருமக்க ளுள்ளவர் * என்கிறபடியே * அஹ்ருதஸஹஜதாஸ்யராகையாலே * அஸந்நேவ * என்பது * ஸந்தமேநம் தத: * என்பதாக வேண்டாதபடி என்றுமொக்க உளராயிருக்கிற மஹாத்மாக்களான நித்யஸூரிகள் "

தத்வத்ரயத்தில் (45.) "நித்யரென்கிறது ஒருநாளும் ஸம்ஸரியாத ஶேஷஶேஷாஶநாதிகளை" என்ற சூர்ணையின் வியாக்கியானத்திலே,

"ஆத்மஸ்வரூபம் நித்யமாயிருக்க, * அஸந்நேவ * என்பது * ஸந்தமேநம் * என்பதாகிறது பகவத் விஷய ஜ்ஞாநராஹித்யஸாஹித்யங்களாலேயிறே."

ஸ்ரீவசநபூஷணத்தில் (180) "தன்னைத்தானேயிறே முடிப்பான்" என்கிற சூர்ணையின் வியாக்கியானத்திலே—

"ஸர்வேச்வரன் இவனை உஜ்ஜீவிப்பிக்கைக்கு அவஸரப்ரதீக்ஷனுய்ப் போருமவனுகையாலே இவனுடைய விநாஶத்துக்கு ஒரு நாளும் அவன் ஹேதுவன்று; இனி * அஸந்நேவ * என்னும்படி தன்னை நஶிப்பித்துக் கொள்ளுவான் தானேயிறே."

முமுக்ஷுப்படியில் (57.) "ஆத்மாபஹாரமாவது ஸ்வதந்த்ரமென்கிற நினைவு; ஸ்வதந்த்ரமாம்போது இல்லையாய்விடும்." என்கிற சூர்ணையின் வியாக்கியானத்திலே—

"தன் ஸ்வரூபம் ஸ்வதந்த்ரமென்கிற ப்ரதிபத்தியாமளவில் * அஸந்நேவ * என்கிறபடியே ஸ்வரூபம் இல்லையாய்விடுமென்கை. ஆகையால் ஶேஷத்வமில்லாதபோது ஸ்வரூபமில்லையென்னத் தட்டில்லையென்று கருத்து.

முமுக்ஷுப்படி வியாக்கியான அவதாரிகையிலே—

"நித்யஸூரிகளோபாதி தன்னை யநுபவித்து நித்ய கைங்கர்ய ரஸராய் வாழுகைக்கு ப்ராப்தியுண்டாயிருக்கச் செய்தேயும் அத்தையிழந்து * அஸந்நேவ * என்கிறபடியே அஸத்கல்பராய்க்கிடக்கிற ஸம்ஸாரி சேதநர்......"

ஆக இந்த ஸ்ரீஸூக்திகளால் அஸத்கல்பதையை விவக்ஷித்து * அஸந்நேவ ஸவதி * என்று ஓதிற்றென்று தெளியலாம். ... .... .... .... .... (*)

---

## 4. தமிழ் வேதாந்தமணி.

— திருவிந்தளூர்ப் பரிமளரங்கனனுபவம் —

பெரியதிருமொழியில் சோழநாட்டுத் திருப்பதிகளை யநுபவித்துக்கொண்டெழுந் தருளாநின்ற திருமங்கையாழ்வார் திருவிந்தளூர் வந்து சேர்ந்தார். கீழே திருநாங்கூர்ப் பதிகளுள் ஒன்றான திருப்பார்த்தன் பள்ளியை யநுபவித்தார். அப்போது ஆழ்வார் தாமான தன்மையை யிழந்து பெண்மையெய்தித் தாய் பாசுரத்தினால் அனுபவித்தவர் திருவிந்தளூரனு பவத்திலே பெண்மையை விட்டு ஆண்மையுடனே யிருக்கின்றாரெனினும், பெண்ணுடையுடுத் துப் பாசுரமிட்டுக் காட்டுகிற துடிப்பை ஆணுடையிலேயே காட்டுகிறாரென்பது இவ்விடத் திற்குத் தன்னேற்றம். (நாலாம்பத்தில் ஒன்பதாம் பதிகமான) * நும்மைத் தொழுதோ மென்று தொடங்கும் பதிகம் திருவிந்தளூரநுபவமாய்ச் செல்லுகிறது. இப்பதிகத்தின் போக்யதை விலக்ஷணமாயிருக்கும். இதனிற் பாசுரங்களைச் சொன்னாலும் செவியுற்றாலும் நெஞ்சு நீர்ப்பண்டமாயுருகும்.

இப்பதிகத்தில் நாலாம் பாட்டில் "வாசிவல்லீரிந்தளூரீர்! வாழ்ந்தே போம் நீரே" என் கிற ஸ்ரீஸூக்தி உயிர்நிலையாயிருக்கும். இதனின் மிக்க வெறுப்புச் சொல்லு வேறொன்று காணவரிது. நம்மாழ்வார் * மின்னிடை மடவார்கள் * என்னுந் திருவாய்மொழியிலும், குலசேகரப் பெருமாள் * ஏர்மலர்ப் பூங்குழலாயர் மாதர் * என்னுந் திருமொழியிலும், இத் திருமங்கையாழ்வார்தாம் பத்தாம் பத்தில் * காதில் கடிப்பிட்டு * என்னுந் திருமொழியிலும் பெண்ணுடையுடுத்து ப்ரணயரோஷம் தலையெடுத்து வெளியிட்ட பரிதாபத்தையெல்லாம் இங்கு ஆண்மை மாறாதே அருளிச் செய்யுமழகு அற்புதம்.

திருவிந்தளூர்ப் பரிமள ரங்கநாதப் பெருமாளைக் கண்ணாரக் காணவேணுமென்றும் கையாரத் தொழவேணுமென்றும் ஒழிவில் காலமெல்லா முடனாய்மன்னி வழுவிலா வடிமை கள் செய்யப்பெற வேணுமென்றும் எவ்வளவோ பாரித்துக்கொண்டுவந்தாராழ்வார். அப் பெருமானோவென்னில், திருக்கண்களாலே குளிர நோக்குதல் வாரியணைத்தல் வினவுதல் அத்தாணிச் சேவகத்திலே ஏவுதல் ஒன்றுஞ் செய்திலன். நிரங்குஶஸ்வதந்திரனான அவனது திருவுள்ளத்தை அறிய வல்லாரார்? ஆழ்வார் திருவாக்கிலிருந்து மிகவுருக்கமான பாசுரங்க ளைக் கேட்கவேணுமென்று பிச்சேறினனென்பதில் ஐயமில்லை. கோபுரவாசற்கதவையு மடைத்துக்கொண்டு கிடந்தான்போலும். ஆழ்வார் துடிக்கிற துடிப்பை என்சொல்லவல் லோம்! முதற்பாட்டை மட்டும் இங்குப் பூர்த்தியாக அநுபவிப்போம்.

நும்மைத்தொழுதோம் நுந்தம்பணிசெய்திருக்கும் நும்மடியோம் *
இம்மைக்கின்பம்பெற்றோம் எந்தாயிந்தளூரீரே! *
எம்மைக்கடிதாக் கருமமருளி ஆவாவென்றிரங்கி *
நம்மையொருகால் காட்டிநடந்தால் நாங்களுய்யோமே.

திருமேனி நிறத்தையுங் காட்டாதேயொளிப்பாயோ பிரானே!, என்னை யிப்படி பட்டினியடித்து நீயே வயிறு வளர்க்கக் கருதினையே!, "உலகு தன்னை வாழநின்ற நம்பீ" என்கிற படியே உலகத்தை வாழ்வித்து நீ ஸத்தை பெற வேண்டியிருக்க உலகத்தைப் படுகொலை யடிப்பதே உனக்கு வாழ்ச்சியாய்விட்டதே!, நீயேவாழ்ந்துபோ. என்று திருவுள்ளம் நொந்து பேசுகிறார் இப்பதிகத்தில் திருவிந்தளூர்த் திருமாலை நோக்கி.

பெருவிடாய்ப் பட்டவன் ஒருகால் நாக்கு நனைக்கத் துளிதீர்த்தம் கிடைத்தால் அதுபோதும் என்பதுபோல இவ்வாழ்வார் திருவிந்தளூர்ப் பெருமானுடைய வடிவழகை ஒருகால் காணப்பெற்றால் போதுமென்கிறார் — நம்மை யொருகால் காட்டி நடந்தால் நாங்களுய்யோமே யென்று. ஒருகால் கண்டவளவில் தமக்குப் பூர்ணத்ருப்தி பிறந்து விடுமென்று பொருளன்று; கண்ணில் சிறிது காணப்பெற்றோமாகில் பிறகு வளைத்துக் கொள்ளலாமென்று திருவுள்ளம்.

பாசுரம் தொடங்கும்போதே நும்மைத் தொழுதோம் என்கிறார். இதற்கு இரண்டு படியாகப் பொருள் காணலாம். தேவதாந்தரங்களுக்கு அந்தராத்மாவாக இருக்கும் நிலையிலே யாம்வந்து பணிந்தோமல்லோம்; அஸாதாரண திவ்யமங்கள விக்ரஹ விசிஷ்டரான உம்மையன்றோ ஆச்ரயித்தோம்; அந்தர்யாமியான நிலையிலே ஆச்ரயித்தாலன்றோ காலதாமதம் பொறுக்கலாவது; ஸாக்ஷாத்தாக உம்மையே ஆச்ரயித்துவைத்தும் இப்படி பேறு தாழ்க்கத் தகுமோ? என்பதாக ஒரு பொருள். அன்றியே விஷயாந்தரங்களைப் பற்றினோமாகில் உகந்த விஷயங்களைப் பிரிந்தாலும் சூதாடியோ சதுரங்கமாடியோ ஒரு விதமாகப் போது போக்கலாம்; அவற்றை யெல்லாம் விட்டு வேறுவகையான போதுபோக்குகளில் ருசியைத் தவிர்க்கவல்ல உம்மையன்றோ யாம் பற்றியிருப்பது. உம்மைப்பிரிந்து ஆறியிருக்க வழியில்லையே! என்பதாகவும் கொள்ளலாம்.

நுந்தம் பணிசெய்திருக்கும் நும்மடியோம் = உமக்குக் கைங்கரியம் பண்ணிக்கொண்டிருக்கிறோமென்று பொருளன்று; 'ஒரு கைங்கரியத்திலும் நியமித்தருளவில்லையே!' என்று வருந்திக்கிடக்குமிவர் அப்படியருளிச்செய்ய ப்ரஸக்தியில்லையன்றோ. உனக்குப் பணிவிடை செய்தே ஸத்தை பெறும்படியான குடியிலன்றோ நான் பிறந்திருக்கின்றேனென்றவாறு. அடியேனை ஒரு கைங்கரியத்திலே நியமித்தருளலாகாதா? என்னும் மனக்குறை தோன்றச் சொல்லும் வார்த்தையிது.

இம்மைக்கு இன்பம் பெற்றோம் = மிக்க பரிதாபம் தோற்றச் சொல்லும் பாசுரத்தில் 'இன்பம் பெற்றோம்' என்கிறவிது கூடாது; ஆனால் இதற்குப் பொருளென்? எனில்; "ந மெயாகஉவாாஂ ஸுவஜ—ந போதாத் அபரம் ஸுகம்" [அறிவுக்கு மேற்பட்ட ஆனந்தமில்லை] என்று ஞானிகள் கூறியிருப்பதனால் ஆனந்தகரமான ஞானம் பெற்றிருக்கிறேன்— நீர் சேஷியென்றும், நான் ேஶஷ பூதனென்றும், அடிமை செய்கையே முறையென்றும்

ஸ்வரூப ஜ்ஞான லாபம் பெற்றிருக்கிறேனென்கை. முறையறியாதவனாயிருந்திட்டேனாகில் ஆறியிருப்பேன்; முறையறியப் பெற்றவனாதலால் துடிக்கவேண்டியதாயிற்று என்பது கருத்து. "இம்மைக்கு இன்பம் பெற்றோம்" என்ற விதனை எதிர்மறை யிலக்கணை [விபரீத லக்ஷணை]யாகக்கொண்டு உரைக்கவுமாம். சோறிடாதவொருவனை நோக்கி 'அழகாகச் சோறிட்டாய்' என்பது போலவும், கல்லாத மூடனை நோக்கி 'வெகு அழகாகக் கற்றாய்' என்பதுபோலவும் 'யாம் வெகு அழகாக ஆனந்தம் பெற்றோம்' என்கிறாராய் ஆனந்தம் பெறாமையைக் காட்டினராகக் கொள்க. இங்கே பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்திகாண்மின்—"அடிமையாலே ஸ்வரூபலாபமாம்படியிருக்கிற எங்களுக்கு விடாய்த்தவிடத்தே அழகிதாகத் தண்ணீர் வார்த்தீர்" என்பதாம். எம்மை இன்பம் பெறாதபடி செய்திட்டீரென்று நொந்து சொல்லுகிறபடி.

எந்தாய் இந்தளூரீரே!=பரமபதத்தைவிட்டு இவ்வூரிலே வந்து ஸந்நிதிபண்ணினது இப்படி யென்னைப் படுகொலை யடிப்பதற்கேயோ? என்று கேட்கிறபடி. ஆக முன்னடிகளால் தம்முடைய வயிற்றெரிச்சலை வெளியிட்டு இனி பின்னடிகளால் இவ்வெரிச்சல் தணியும்வகை விண்ணப்பம் செய்கிறார்.

எம்மைக் கடிதாக் கருமமருளி=சேஷத்வ ஜ்ஞானத்தைப் பிறப்பித்தருளின தேவரீரே சேஷத்வத்திற்குத் தகுதியானதொரு குற்றேவலிலே என்னை நியமித்தருளவேணுமென்கிறார். பிரானே! உன்னைக் கண்ணில் காண்பதே அருமைப்பட்டிருக்கும்போது கைங்கர்ய ப்ரார்த்தனை பண்ணுகிறேனே! இஃது என்ன பேதைமை! முந்துற முன்னம் ஒருகால் ஸேவைஸாதிக்கத் திருவுள்ளமாயின் அவ்வளவிலே நான் உஜ்ஜீவித்துப் போவேனே யென்கிறார் "ஆவாவென்றிரங்கி நம்மையொருகால் காட்டி நடந்தால் நாங்களுய்யோமே" என்று. இரங்கி என்றதனால் நம்முடைய பிரார்த்தனைகளெல்லாம் கிடக்க அவனுடைய திருவுள்ளத்திலே தோன்றும் இரக்கமே கார்யகரம் என்கிற சாஸ்த்ரார்த்தம் நன்கு வெளியாம். இங்கே வியாக்கியான ஸ்ரீஸூக்தி;—"தோழுதோம் என்று வளைப்பிடவொண்ணாது காணும்; அபிமதம் பெறுகைக்கு அவனுடைய இரக்கமே வேணும்" என்று. ஈற்றடியில் நம்மை யென்றது தேவரீரையென்றபடி. "நம்ம வீட்டில் குழந்தைகள் க்ஷேமமா?" என்கிற உலகவார்த்தையை நோக்குக. 'நம்மை யொருகால் காட்டினால்' என்னாமல் காட்டிநடந்தால் என்றதனால் புறப்பாடு ஸேவிக்கையிலே காதல் கொண்டமை விளங்கும். .... ... (*)

வடமொழி வேதத்தை பாஷ்யத்தோடும் கற்ற வொருவரையும் திவ்யப்பிரபந்தத்தை வியாக்கியானத்தோடும் கற்ற வொருவரையும் ஸபையில் இருத்தி இருவரையும் நோக்கி 'தேவரீர் வேதத்தில் ஒரு ருக்கின் பொருளை விவரிப்பது; தேவரீர் அருளிச்செயலில் ஒரு பாசுரத்தின் பொருளை விவரிப்பது' என்று வேண்டிக்கொண்டால் வேதார்த்தத்தின் நிலைமையும் திவ்யப்ரபந்தார்த்தத்தின் நிலைமையும் ரஸிகர்களுக்கு விளங்கும். .... .... (*)

---

## ஒரு விளம்பரம்

திவ்யப்பிரபந்தங்களுக்கெல்லாம் ஸம்ஸ்க்ருத பாஷையிலும் ஹிந்தீ பாஷையிலும் எளிய வியாக்கியானம் தேவநாகர லிபியில் அச்சிடப்பட்டு வருகிறது. விரைவில் ஒரு பகுதி வெளிவரும். தேவையுள்ளவர்கள் முன்னாடியே தெரிவித்துக் கொள்ளவேணும். (*)

# நாற்றைம்பது நல்வார்த்தைகள் (2)

முன்தொடர்ச்சி.

முன்னிதழில் 75 நல்வார்த்தைகள் வெளியிடப்பட்டன. மிகுந்த 75 நல்வார்த்தைகள் இனியாம். இந்த 75 நல்வார்த்தைகளில் ஒருவிதமான க்ரமம் கொள்ளப்படுகிறது. அதாவது, ஒவ்வொரு வார்த்தையும் ச்ருதிஸ்ம்ருதிதிஹாஸபுராண ஸாஹித்யாதி ஸம்ஸ்க்ருத வசனங்களையுட்கொண்டிருக்கும். அந்த வசனங்களெல்லாம் அகராதி வரிசையிலிட்டே விவரிக்கப்படும். ஸமயங்களில் எடுத்துப் பார்க்க ஸௌகரியமாக.

## 76. அஞ்ஜலிம் ப்ராங்முக: க்ருத்வா.

(அஞ்ஜலிம் ப்ராங்முக: க்ருத்வா) இராமபிரான் விபீஷணாழ்வானைப் பரிக்ரஹித்த பிறகு கடலைக் கடக்கவேண்டிய உபாயமென்ன வென்பதை நிர்ணயிக்கும் பொறுப்பை விபீஷணாழ்வான் மீது வைத்திட, அவன் தனக்கு ஶரணாகதியினால் பலன் கைபுகக் கண்டபடியாலே பெருமாளுக்கும் அதுவே சிறந்த வுபாயமாகுமென்றுகருதி ஸமுத்ரசரணாகதியையே உபாயமாகக்கூற, பெருமாள் ஸமுத்ரராஜனை நோக்கி ஶரணாகதிபண்ணினாரென்பதை வெளியிட்ட வால்மீகி மஹர்ஷியும் கம்பரும் ஸ்ரீராமபிரானையும் ஒரு கடலாகப் பேசினார்கள்.

"அஞ்ஜலிம் ப்ராங்முக: க்ருத்வா ப்ரதிஶிஶ்யே மஹோததே:—அஞ்ஜலிம் ப்ராங்முக: க்ருத்வா ப்ரதிசிச்யே மஹோததே:" என்பது வான்மீகி முனிவரின் வாக்கு. இதில் ப்ரதிசிச்யே என்றதனால் அந்தக் கடலை நோக்கி மற்றொரு கடல் பள்ளிகொண்டதுபோலும் என்று கருத்துத் தொனிக்கின்றதென்று மஹான்கள் வியாக்கியானம் செய்தார்கள். கம்பரும் வருணனை வழிவேண்டுபடலத்தில் "கருணையங்கடல் கிடந்தனன் கருங்கடல்நோக்கி" என்றார். திருவாய்மொழியில் 6—9—3 பாசுரத்தின் நம்பிள்ளை யீட்டிலும் "ஒரு கடல் ஒரு கடலோடே ஸ்பர்த்தித்துக் கிடந்தாப்போலேயிருக்கை" என்றருளிச் செய்யப்பட்டுள்ளது. வேதாந்தவாசிரியரும் ரகுவீரகத்யத்தில் "ப்ரதிஶயந பூமிகா பூஷித பயோதி புளிந!—ப்ரதிசயந பூமிகாபூஷிதபயோதி புளிந!" என்றார். ஆக இப்படிப்பட்ட முன்னோர்மொழிகளுக்குச் சேர எம்பெருமானுக்கும் கடலுக்கும் ஒற்றுமையுள்ளது. இதனாலும் கடல்வண்ணனவன்.

## 77. அஜஸ்ர ஸஹஸ்ரகீதிஸேகோத்ததிவ்யநிஜஸௌரபம்.

பட்டர் ஸ்ரீரங்கவாஸத்தை யிழந்து சிலவாண்டுகள் திருக்கோட்டியூரில் வஸிக்க நேர்ந்தது. ஸ்ரீரங்கவாஸத்திற்கு ஸௌகரிய மேற்பட்டபிறகு அங்கிருந்து மீண்டு கோயிலுக்கு எழுந்தருளுகையில் ஸ்ரீரங்கராஜஸ்தவமருளிச்செய்தார். தோத்திரத்தின் திருநாமத்திற்குச் சேர முகப்பிலேயே ஸ்ரீரங்கராஜனை ஸ்துதிக்கத் தொடங்கவில்லை. ஆசார்ய பரம்பரா ஸ்துதி முன்னாக விழிந்து மங்களாசரணம் செய்து, அவையடக்கம் கூறுதலாகிற நைச்சியாநுஸந்தானம் செய்து திருக்காவிரியில் நீராடினமையைப் பேசி, அங்குள்ள சோலைகளின் வாய்ப்பை வருணித்து, திருவரங்கமாநகரின் சிறப்பைப் பாடி, நகரபரிபாலகர்களை வணங்கி அவர்களிடம் அனுமதி பெற்று உள்ளே புகுந்து அங்குள்ள ஸகலசராசரங்களையும் நித்யமுக்தர்களின் திருவுருவமாகப் பாவித்து வணங்கி, கோபுரப்ராகாரங்களோடு கூடின பெரியகோயிலின் நிலைமையை வருணித்து, திருமங்கையாழ்வார் திருப்பணியான திருமண்டபங்களையும் திருமதிள்களையும் தொழுது, ஸன்னிதி த்வாரபாலகர்களை ஸேவித்து, ஆயிரக்கால் மண்ட

பத்தை மங்களாஶாஸநம் செய்து, சந்திரபுஷ்கரிணியிற் குடைந்தாடினமை கூறி, அப்புஷ்கரிணியின் கிழக்கே கோயில்கொண்டிருக்கின்ற (மூல மூர்த்திகளான) ஆழ்வார்கள் பதின்மரையும் இறைஞ்சி, ப்ரணவாகார விமானத்தைக் கைதொழுது, மேட்டழகு சிங்கரை ஸேவி வணங்கி, சந்திரபுஷ்கரிணிக்கரையில் விளங்குவதும் நம் ஆசாரியர்களுக்குப் புகலிடமாயிருந்ததுமான திருப்புன்னை மரத்தை * ஸ்ரீரங்கராஜகரஸம்ரிதேத்யாதியான நாற்பத்தொன்பதாம் சுலோகத்தினால் துதிக்கின்றார். கோவிலுக்குள் ஒரு விருக்ஷமிருந்தால் அதற்கொரு சுலோகமியற்றவேணுமோவென்று சிலர் நினைக்கக்கூடும். கேண்மின்; திருப்புன்னை அப்படி ஸாமான்யமான விருக்ஷமன்று; அதற்கு இரண்டு சிறப்புகள் கூறுகின்றார்; (1 இரவில் திருப்பள்ளியான பிறகு பீங்குமுத்திரையாகி யாவரும் புறப்பட்டுப் போனபின் ஸ்ரீரங்கநாதனும் ஸ்ரீரங்கநாச்சியாரும் வெளியே போந்து விலாஸ விஹாரங்கள் செய்தருளும்போது, இத்திருப்புன்னையின் மலர்களைப்பறித்துக் காதணியாகவணிந்துகொள்ள விரும்பிய ஸ்ரீரங்கநாயகி தன் திருக்கைக்கு மலர் எட்டாமையாலே மூசித்து நிற்க, அப்போது மலர் கொய்வதற்குப் பாங்காக ஸ்ரீரங்கநாதன் தனது திருக்கையினால் அம்மரத்தின் கிளைகளைத் தாழ்த்த, அவற்றினின்றும் பிராட்டி எளிதாகப் பூக்கொய்துகொள்வள்—என்னுஞ் சிறப்பு முன்னம் கூறப்பட்டது. இது ஆசிரியர் உட்கண்ணாலே கண்ட சிறப்பு. (2) அக்காலத்தில் யாவரும் கட்கண்ணாலே கண்ட சிறப்பு "அஜஸ்ரஸஹஸ்ரகீதிஸேகோத்த திவ்யநிஜஸௌரபம்—அஜஸ்ரஸஹஸ்ரகீதி ஸேகோத்த திவ்யநிஜஸௌரபம்" என்கிற பெரிய விசேஷணத்தினால் தெரிவிக்கப்படுகிறது. அந்த நல்லடிக்காலத்திலே திருப்புன்னையின் கீழேயிருந்துகொண்டு காலை வேளைகளில் திருவாய்மொழி சந்தை சொல்லுவாரும், பிற்பகலிலே பகவத்விஷயார்த்த அர்ச்சை செய்வாருமாயிருப்பர்களாம். அருகேயிருக்கிற புஷ்கரிணியிலிருந்து துளி தண்ணீரெடுத்துக் கொட்டுவாரில்லை; அஜஸ்ரஸஹஸ்ரகீதிஸேகமே வயஃகமாக வளர்ந்ததாயிற்று. "தீர்த்தங்களாயிரம்" என்று ஆழ்வார்தாமேயருளிச் செய்தாரே. ஸஹஸ்ரகீதியென்று திருவாய்மொழியைச் சொன்னது திவ்யப்ரபந்தங்களுக் கெல்லாமுபலக்ஷணம்.

## 78. அதீதிபோதாசரணப்ரசாரணை:.

(அதீதிபோதாசரணப்ரசாரணை:) உலகில் அபரிமிதமாகக் கற்றவர்களை 'சதுர்தஶ வித்யாபாரங்கதர்கள்' என்று சொல்லுவதொன்றுண்டு. பதினான்கு வித்யைகளைக் கரைகண்டவர்கள் என்பது இதன் பொருள். பதினான்கு வித்யைகள் எவையென்னில், "அங்காநி வேதாஶ்சத்வாரோ மீமாம்ஸா ந்யாயவிஸ்தர: । புராணம் தர்மஶாஸ்த்ரஞ்ச வித்யா ஹ்யேதாஶ்சதுர்தஶ—அங்காநி வேதாச் சத்வாரோ மீமாம்ஸா ந்யாய விஸ்தர:, புராணம் தர்மசாஸ்த்ரஞ்ச வித்யாஹ்யேதாச் சதுர்தச." என்கிறபடியே, சீக்ஷா வியாகரணம் சந்தஸ் நிருக்தம் ஜ்யோதிஷம் கல்பம் என்கிற ஆறு அங்கங்களும் நான்கு வேதங்களும், மீமாம்ஸை, நியாயம், புராணம், தர்மஶாஸ்த்ரம் ஆக இவை யித்தனையுஞ் சேர்ந்து பதினான்கு வித்யைகளெனப்படும். இவ்வளவிலும் பாரங்கதராக ஒருவர் தேறுவது மிகவரிது. ஸ்ரீஹர்ஷகவி நைஷதகாவியத்தில் "அதீதிபோதாசரணப்ரசாரணைர் தஶாஶ்சதஸ்ர: ப்ரணயந் நுபாதிபி: । சதுர்தஶத்வம் க்ருதவாந் குத: ஸ்வயம் ந வேத்மி வித்யாஸு சதுர்தஶஸ்வயம்—அதீதிபோதசரணப்ரசாரணை: தஶாச் சதஸ்ர: ப்ரணயந் நுபாதிபி:, சதுர்தஶத்வம் க்ருதவாந் குதஸ் ஸ்வயம் ந வேத்மி வித்யாஸு சதுர்தசஸ்வயம்." என்றொரு சுலோகம் கூறுகின்றார். சதுர்தஶவித்யா: என்பதற்குப் பதினான்கு வித்யைகள் என்கிற பொருள் தவிர மற்றொரு பொருளும் கொள்வ

தற்கிடமுண்டு; அதஶ்சதுஷ்பாதஸாரம் தாஃ, அதஶ்சதுஷ்பாதாஃ; தாஃசதுர்பிஷ்ட்ஹிதாஃ அதஶ்சதுஷ்பாவித்யாஃ—நான்கு பாதங்களையடைவிக்கப் பெற்ற வித்யைகள் சதுஷ்பாவித்யைகளாம்; வித்யைகளுக்கு நான்கு பாதங்கள் எவை யென்னில்; அதீதிபோதாசரணப்ரசாரணங்கள்; அதீதியாவது குருமுகமாகக் கற்கை. போதமாவது குரு கற்பித்தவற்றை நன்கு உணருகை. ஆசரணமாவது—கற்றதற்கும் உணர்ந்ததற்கும் பலன் அனுட்டானமாதலால் ஸதநுஷ்டானம் கொண்டிருக்கை. ப்ரசாரணமாவது தானனுட்டித்து நிற்குமளவன்றிக்கே "பணிமானம் பிழையாமே அடியேனைப் பணிகொண்ட" என்று ஆழ்வாருளிச்செய்தபடியும் "ஸ்காலித்யே ஶாஸிதாரம்—ஸ்காலித்யே ஶாஸிதாரம்" என்று வேதாந்த வாசிரியர் பணித்தபடியும் பிறரையும் ஶிக்ஷாபூர்வகமாக அனுட்டிக்கச் செய்தல். ஆக இப்படிப்பட்ட நான்கு பாதங்கள் பொலியும்படி கல்விகற்க முயலவேண்டும்.

## 79. அநந்யா ராகவேணுஹம்—அநந்யா ஹி மயா ஸீதா.

(அநந்யா ராகவேணாஹம்—அநந்யா ஹி மயா ஸீதா) ஸ்ரீராமாயணத்தில் தனித்தனியிடங்களில் தோன்றிய திவ்யதம்பதிகளின் வாக்குக்கள் ஏகரூபமாகக் காண்கின்றன. ஸுந்தரகாண்டத்தில் பிராட்டி இராவணனை நோக்கிக் கூறும்போது "அநந்யா ராகவேணாஹம் பாஸ்கரேண ப்ரபா யதா—அநந்யா ராகவேணுஹம் பாஸ்கரேண ப்ரபாயதா." என்றாள். ப்ரபையானது ப்ரபாவானை விட்டுப் பிரிந்திருக்கமாட்டாது. ப்ரபாவானான ஸூர்யன் ஆகாசத்திலும், ப்ரபை நிலத்திலும் இருப்பதாகக் காணப்பட்டாலும் இது பிரிவாகக் கொள்ளத்தக்கதன்று; இது போல, ஸ்ரீராகவன் பஞ்சவடியிலிருப்பதாகவும், நான் இலங்கையிலே யிருப்பதாகவும தோன்றினும் எங்களுக்கு இது பிரிவன்று என்றாள் ஸீதாபிராட்டி. இவள் இங்ஙனே சொன்னது பெருமாளுக்குத் தெரியாது; ஆயினும் அவருடைய திருவாக்கிலும் இவ்விஷயம் இவ்விதமாகவே வெளிவந்துளது. (யுத்தகாண்டத்தில் 121–) "அநந்யா ஹி மயா ஸீதா பாஸ்கரேண ப்ரபா யதா—அநந்யா ஹி மயா ஸீதா பாஸ்கரேண ப்ரபா யதா." என்கிறார் பெருமாள். * பாஸ்கரேண ப்ரபா யதா * என்கிற உவமை திவ்யதம்பதிகளிருவராலும் ஏகரீதியாகக் கொள்ளப்பட்டிருப்பது நோக்கத்தக்கது. இதையிட்டே "நித்யாநபாயிநீம்—ச்ரியம் தேவீம்" என்று எம்பெருமானாருளிச் செய்தது. த்வயத்தில் மதுப்பாலும் இதுவே தெரிவிக்கப்படுகிறது. அவதாரங்களில் பிரிவு நேர்ந்ததாகக் காண்பதன் மருமம் வேறிடத்தில் விளக்கப்படும்.

## 80. அநாலோசிதவிஶேஷாஶேஷலோக ஶரண்ய!.

(அநாலோசிதவிஶேஷாஶேஷலோகஶரண்ய) ஸ்வாமி யெம்பெருமானார் ஶரணாகதிகத்யத்தில் எம்பெருமானுக்கு இட்டருளியிருக்கிற பல ஸம்போதனங்களில் "அநாலோசிதவிஶேஷாஶேஷ லோகசரண்ய!" என்பதும் ஒரு ஸம்போதனம். * ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம் * என்றும் * ஸர்வலோகஶரண்யாய ராகவாய மஹாத்மநே * என்றும் * ஸர்வஸ்ய ஶரணம் ஸுஹ்ருத் * என்றும் ப்ரஸித்தனாயிருக்கிற எம்பெருமான் வஸிஷ்டசண்டாளவிபாகமற யாவர்க்கும் ஒருங்கே புகலிடமாயிருப்பன்; ஒருவரிடத்தில் உத்கர்ஷம் கண்டோ, மற்றொருவரிடத்தில் நிகர்ஷம் கண்டோ ஶரண்யத்வத்தில் வாசிவையான் என்கிறது. அநாலோசிதவிஶேஷம் யதா ததா அஶேஷலோகஶரண்யனானவனே! யென்றபடி.

[இடையில் ஒரு ஸங்கட விஜ்ஞாபனம்; இந்த ஸ்ரீஸூக்தியுள்ளவிடத்தில் தேசிகனுடைய சரணாகதிகத்யபாஷ்யத்தில் என்ன விசேஷம் ஸாதிக்கப்பட்டிருக்கிறது, பார்ப்போம் என்று அவ்விடத்தில் கண்செலுத்தியபோது மிகவும் சோகாவஹமானவொரு அச்சுப்பிழை புலப்பட்டது. ஸுமார் 1940-ல் நாம் அச்சிட்ட வேதாந்ததேசிக க்ரந்தமாலையில் அப்பிழை கண்டதனால் மிகுந்த சோகமுண்டாயிற்று. அதாவது

"அனாலோசிதவிசேஷேதி. அத்ர விசேஷசப்தவிவக்ஷிதம்
அனாலோசிதகுணகணமிதி ஸ்ரீவைகுண்டகத்ய வ்யாக்யா.'

என்று அச்சு விழுந்திருக்கிறது. இது மிகவும் பிசகு. அந்ய பரம்பரையில் வந்த பாடம் திருத்தப்படாமல் போயிற்று. ஸ்ரீவைகுண்டகத்யம் உபக்ரமத்தில் "அனாலோசிதகுணாகுணாகண்டஜனானுகூலாமர்யாதசீலவத:—அனாலோசித குணாகுண• அகண்டஜனானுகூல அமர்யாதசீலவத:" என்பது பாடமேயொழிய "அனாலோசித குணகண" என்பது பாடமன்று. அது அந்வயிக்கமாட்டாது; "அத்ரவிசேஷசப்தவிவக்ஷிதம்" என்று மூலபாஷ்யத்திலிருந்து மேலே உதாஹரிக்கப்பட்டுள்ள ஸ்ரீஸூக்திக்கும் சேரமாட்டாது. ஆகவே "அனாலோசித குணாகுண" என்று திருத்திக்கொள்ளவேண்டியது அவசியம். குணாகுண மென்றது குணதோஷங்களென்றபடி 'அனாலோசித விசேஷ' என்றவிடத்தில் விசேஷ சப்தத்தினால் விவக்ஷிதம் குணதோஷங்களே யாகும். குணவான்களுக்குத்தான் சரண்யன், தோஷவான்களுக்கு சரண்யனல்லன் என்பதன்றிக்கே துஷ்டாதுஷ்ட விபாகமற அனைவர்க்கும் புகலிடமானவன் எம்பெருமான் என்கை.

## 81. அநுஜநுரநுரூபரூபசேஷ்டா.

எம்பெருமான் ஸாதுபரித்ராணாதி நிமித்தமாக அவதாரங்கள் செய்கிறபோதெல்லாம் பிராட்டியும் தவறாது கூடவே அவதாரம் செய்வதாக நூற்கொள்கை. இதை ஸ்ரீ பராசரபகவான் ஸ்ரீ விஷ்ணுபுராணத்தில் (1–9–142) * ஏவம் யதா ஜகத்ஸ்வாமீ தேவதேவோ ஜனார்தன:। அவதாரம் கரோத்யேஷா ததா ஸ்ரீஸ்தத்ஸஹாயினீ ॥....ராகவத்வேऽபவத் ஸீதா ருக்மிணீ க்ருஷ்ணஜன்மனி। அன்யேஷு சாவதாரேஷு விஷ்ணோரேஷாऽனபாயினீ ॥ தேவத்வே தேவதேஹேயம் மனுஷ்யத்வே ச மானுஷீ। விஷ்ணோர்தேஹானுரூபாம் வை கரோத்யேஷாத்மனஸ்தனும் ॥ * இத்யாதி ச்லோகங்களலே விவரித்துள்ளார்! இதையுட்கொண்டு பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் * அனுஜனுரனுரூபரூபசேஷ்டா ந யதி ஸமாகமமிந்திராகரிஷ்யத்। அஸரஸமதவா அப்ரியம் பவிஷ்ணு த்ருவமகரிஷ்யத ரங்கராஜ நர்ம—அநுஜநுரநுரூபரூபசேஷ்டா ந யதி ஸமாகமமிந்திராகரிஷ்யத், அஸரஸமத வா அப்ரியம் பவிஷ்ணு த்ருவமகரிஷ்யத ரங்கராஜ! நர்ம. * என்று இன்சுவைமிக வருளிச் செய்கிறார். ரங்கநாதா! தேவரீர் அவதாரம் செய்தருளும்போதெல்லாம் பெரியபிராட்டியாரும் தேவரீருடைய திருமேனிக்கும் திருவிளையாடல்களுக்கும் தகுதியான ரூபசேஷ்டிதங்களை ஏற்றுக்கொண்டு திருவவதாரம் பண்ணவேதான் தேவரீருடைய அவதாரங்கள் இனிமைபெறுகின்றன; லக்ஷ்மீ ஸநாதராகவன்றிக்கே ப்ரஹ்மசாரி நாராயணனாக நீர் அவதரித்தீராகில் உம் அவதாரகதைகள் காசு பொறாது காணீர் என்றாராயிற்று. இங்ஙனே ஸ்ரீரங்கநாதனை நோக்கிக் கூறினவிதனை இவ்

வாசிரியர் தாமே ஸ்ரீரங்கநாச்சியாரை நோக்கியும் கூறுகின்றார் ஸ்ரீ குணரத்ந கோஶத்தில்; (48) *யதி உநுஜதிர ஸ்ராம ஸ்ரீயா தாரூவுரதே: அநுஜநந நமுவா தேவி! நாவாத மிஷ்ய: [illegible] நாயஸ்ய ஊத:! உரதுஸ்ரு உரவிஜொதஜ காஜாய தாக்ஷி !* என்கிறச்லோகத்தினுல். வ்ருத்தபேதமும் ஸம்போத்யவ்யக்தி பேதமுமொழிய தாத்பர்ய பேதமில்லை. எம்பெருமானுடைய அவதாரம் பிராட்டியின் அவதாரத்தினுல் இனிமை பெறுகின்றதென்றால் இதன்கருத்து யாதென்று சிந்திக்க நேரும். கேண்மின். எம்பெருமானுடைய திருவவதாரம் ஸாதுபரித்ராணார்த்தமாகவேயன்றோ; அது நிறைவேறுவது பிராட்டியினுடைய ஸந்நிதியினுலே யாகுமத்தனை. "ரக்ஷிக்கும்போது பிராட்டி ஸந்நிதி வேண்டுகையாலே இதிலே ஸ்ரீஸம்பந்தமநுஸந்தேயம்" என்றும், "இவள் ஸந்நிதியாலே காகம் தலை பெற்றது; அதில்லாமையாலே ராவணன் முடிந்தான்" என்றுமுள்ள முமுக்ஷுப்படி ஸ்ரீஸூக்திகள் இங்கே அநுஸந்தேயம்.

82. அந்தர்ஹிதோ நிதிரஸி த்வமசேஷபும்ஸாம்.

(அந்தர்ஹிதோ நிதிரஸி த்வமசேஷ பும்ஸாம்.) எம்பெருமானை ஆழ்வார்கள் நிதியாகப் பேசி யநுபவித்தார்கள். "நிதியே திருநீர்மலை நித்திலத்தொத்தே" "நிதியினைப் பவளத்தூணை" யென்றும், "வைத்தமாநிதியாம் மதுசூதன்" என்றும் பல பாசுரங்களுள்ளன. ஆழ்வார்திருநகரியைச் சேர்ந்த நவதிருப்பதிகளுள் ஒன்றான திருக்கோளூரில் சயனித்தருளாநின்ற எம்பெருமான் * வைத்தமாநிதி யென்றே திருநாமம் பெற்றிருப்பது ப்ரஸித்தம். இவற்றையெல்லாமடியொற்றிக் கூரத்தாழ்வான் (ஸ்ரீவைகுண்டஸ்தவே) * அந்தர்ஹிதோ நிதிரஸி த்வமசேஷபும்ஸாம் லப்யோஸி புண்யபுருஷைரிதரைர் துராப:— அந்தர்ஹிதோ நிதிரஸி த்வம் அசேஷபும்ஸாம் லப்யோஸி புண்யபுருஷைரிதரைர் துராப:* என்றருளிச் செய்தார். நிதி ஒருவர் கண்ணுக்கும் புலப்படாதபடி மறைந்து கிடக்கச் செய்தேயும் சில பாக்யஶாலிகளுக்கு அது எளிதாகிறபடியைக் காணுகின்றோம். அதுபோல எம்பெருமானும் * ஆக்கையுள்ளுமாவியுள்ளுமல்லபுறத்தினுள்ளும் நீக்கமின்றி யெங்கும் நின்றாய் * என்கிறபடியே எங்கும் நிறைந்த பொருளாயிருக்கச் செய்தேயும் தௌர்ப்பாக்யசாலிகளுக்குப் புலப்படாதவனுயும் இல்லையென்றே சொல்லத்தக்கவனுயுமிருந்து, கூரத்தாழ்வான் போன்ற பரமபாக்யசாலிகளுக்கு அருமையற அநுபாவ்யனுயிருப்பன்.

83. அதிரிச்யதே ஸூஜந்மா கச்சிஜ் ஜநகாத்.

(அதிரிச்யதே ஸூஜந்மா கச்சிஜ் ஜநகாந்நிஜேந சரிதேந। கும்ப: பரிமிதமம்ப: பிபதி, ப்ரபௌ கும்பஸம்பவோம்போதிம் — அதிரிச்யதே ஸூஜந்மா கச்சித் ஜநகாந்நிஜேந சரிதேந, கும்ப: பரிமிதமம்ப: பிபதி, பபௌ கும்பஸம்பவோம்போதிம்.) உலகத்தில் சில பேர்கள் தாங்கள் தம் தந்தையிற்காட்டிலும் அதிசயித்த பெருமை யுடையவர்களாக ஆவதுண்டு. இதற்கொரு த்ருஷ்டாந்தம் காணலாம். குடமானது ஒருமரக்கால் அல்லது இரண்டு மரக்கால் ஜலத்தையே கொள்ளக் கூடியது; குடத்தில் நின்று பிறந்தவரான அகத்தியமுனிவரோ வென்னில், கடல் முழுவதையும் பருகவல்லவரானார். ஜநகமான குடத்தின் செய்கையிற் காட்டிலும் தஜ்ஜந்யரான முனிவரின் செய்கை மிக அதிசயித்ததாயிற்றன்றோ. அகத்தியர் கடல் பருகின வரலாறு புராண ப்ரஸித்தம்.

84. அஜ்ஞஸ் ஸுகமாராத்யஸ் ஸுகதரமாராத்யதே விசேஷஜ்ஞ:.

(அஜ்ஞஸ் ஸுகமாராத்யஸ் ஸுகதரமாராத்யதே விசேஷஜ்ஞ:। ஜ்ஞாநலவதுர்விதக்தம் ப்ரஹ்மாபி நரம் நரஞ்ஜயதி.) உலகத்திலுள்ள அதிகாரிகளை மூன்று வகையாகப் பிரிக்கலாம் 1. ஒன்றுமறியாத மூடர்கள். 2 எல்லாம் நன்கு தெரிந்த விசேஷ வித்துக்கள். 3. ஸ்வல்பம்தெரிந்து எல்லாம் தெரிந்துவிட்டதாக நினைத்துக் கொக்கரிக்குமவர்கள் என மூவகை. இவர்களுள், ஒன்று மறியாத மூடர்களை எளிதில் தெளிவிக்கமுடியும். ஏனென்றால், அவர்கள் நல்லாரிடத்து நல்லது தெரிந்துகொள்ளவேணுமென்கிற விருப்பமுடையவர்களாதலால். இவர்களுக்கு மேற்பட்டவர்களான விசேஷ வித்துக்களை த்ருப்திபடுத்துவதும் மிகவும் எளிது. அவர்கள் பரம ரஸிகர்களாகையாலே அன்னவர்களோடு பேசுவது பரம ரஸமாயிருக்கும். சொல்லுகிற விஷயங்களை மிகவும் ரஸமாகவும் எளிதாகவும் அவர்கள் க்ரஹிக்க வல்லவர்களாதலால் அவர்களை ஆராதிப்பது மிகவுமெளிது. மூன்றாமவர்களாகத் தெரிவிக்கப்பட்டவர்களுண்டே, அவர்களைத் தெளிவிக்க ப்ரஹ்மாவாலுமாகாது. எல்லாமறிந்ததாகப் பாவனைகொண்டு எதிலும் குதர்க்கம் செய்வதும், இன்னது சொல்லி யிருக்கிறதென்று உணராமலே தூஷிப்பதும் அன்னவர்களது செயலாதலால் அவர்களுடைய வாழ்நாள் அப்படியே கழியவேண்டியதாகுமேயன்றி, தெளிவுபெற்றுக் களிக்க அவர்கள் பாக்கியமற்றவர்களே.

85. அங்குஷ்டாக்ரபரீணாஹ ஜிஹ்வாக்ராயாஸபீரவ:।
ஸர்வாங்கீணபரிக்லேசம் ஸஹந்தே ஹந்த ஸந்ததம்॥

(அங்குஷ்டாக்ரபரீணாஹ ஜிஹ்வாக்ராயாஸபீரவ:,
ஸர்வாங்கீணபரிக்லேசம் ஸஹந்தே ஹந்த ஸந்ததம்)

கட்டைவிரலின் நுனியளவான நாக்கின் நுனியை இளமையில் சிரமப்படுத்த அஞ்சியிருந்தவர்கள் தங்கள் வாழ்நாள் முழுவதும் ஸகல அவயவங்களையும் சிரமப்படுத்தக் கடமைப்பட்டவர்களாவர். இதன் கருத்து யாதெனில், இளமையில் நாவைச் சிறிது சிரமப்படுத்திக் கல்வி பயின்றுவிட்டால் ஸுகமாக ஜீவனம் நடத்திக் கொள்ளலாம்; அங்ஙனம் கல்வி பயிலாதவர்கள் பிறகு ஜீவிகைக்காக ஸகல அவயவங்களினாலும் சிரமப்படவேண்டியதாகும். தலையாலே மூட்டைகள் சுமந்தும், காலாலே வழிநடந்தும், கையாலே விறகு பிளத்தல் முதலியன செய்தும் ஆகவிப்படிப் பல பல அவயவங்களை சிரமப்படுத்தியே ஜீவிக்க நேரும். ஸ்வல்பகாலம் ஒரு அவயவத்தைச் சிரமப்படுத்தக் கூசுமவர்களுக்கு வாழ்நாள் உள்ளவரையில் இப்படி சிரமப்பட நேர்கின்றபடியால் கல்வி பயில முயல்வதே நன்று என்று தெரிவித்தவாறு.

86. அதிபரிசயாத் அவஜ்ஞா ஸந்ததகமநாத் அநாதரோ பவதி।
மலயே பில்லபுரந்த்ரீ சந்தநதருகாஷ்டமிந்தநம் குருதே॥

அதிபரிசயாத் அவஜ்ஞா ஸந்ததகமநாத் அநாதரோ பவதி.
மலயே பில்லபுரந்த்ரீ சந்தநதருகாஷ்டமிந்தநம் குருதே.

"பழகப் பழகப் பாலும் புளிக்கும்" என்கிற கதையாய் அதிக பரிசயம் செய்தால் அவமதிப்பு நேரிடும்; ஓரிடத்திற்கு அடிக்கடி சென்றால் அநாதரவு ஏற்படும். (இதற்கு உதாரணம்.) மலய மலையில் குறத்திகளின் கையில் சந்தனக் கட்டைகள் மலிவாகக் கிடைத்து

விட்டபடியால் அக்குறமாதர் அவற்றின் மதிப்பையறியாமல் அவற்றை விறகாக உபயோகிக்கக் காணுகின்றோம். அருமையானவஸ்து அருமையாகவேயிருந்தால் இப்படியாகுமோ?

87. ஆர்த்தத்ராணபராயணஸ் ஸ பகவாந் நாராயணோ மே கதி:.

ஸப்தர்ஷி ஸ்தோத்ரமென்று ஏழு சுலோகங்கள் கொண்ட வொரு ஸ்துதிநூல் ப்ரஸித்தமாகவுள்ளது; அதில் ஒவ்வொரு ச்லோகத்திலும் நாலாவது பாதம் "ஆர்த்தத்ராண பராயணஸ் ஸ பகவாந் நாராயணோ மே கதி:" என்றே தலைக்கட்டுகின்றது. ப்ரஹ்லாதாழ்வான், கஜேந்திராழ்வான், விபீஷணாழ்வான் போல்வாரான சில வ்யக்தி விசேஷங்களை யெடுத்துக்காட்டி இவர்களுடைய ஆர்த்தியைத் தீர்த்து ரக்ஷித்தருளினபடியைச் சொல்லியுள்ளது. இக்காலத்தவர்கள் இதில் விப்ரதிபத்தி பண்ணிப்போருவர்கள். ஏதோசில புராண கதைகளைக்கொண்டு 'அவனை ரக்ஷித்தார், இவனை ரக்ஷித்தார்' என்று சொல்லிவிடுவதனால் என்னாகும்? இப்போது நம்போல்வார் ஆர்த்தியடைந்து துடிக்கிறகாலத்திலே நமக்கு ஒரு ரக்ஷணமும் செய்யக் காண்கின்றிலோமே. நமக்குக் கஷ்டங்கள் விளையும்போது நம்மை நாமேயன்றோ ரக்ஷித்துக் கொள்ளுகிறோம். வியாதியுண்டானால் மருத்துவனைத் தேடியோடுகிறோம்; *மருத்துவனாய் நின்ற மாமணிவண்ணா * மருந்தும் பொருளுமமுதமுந் தானே * என்று புகழப்படுகிற எம்பெருமான் வந்து சிகித்ஸை செய்வதாகக் காண்கின்றிலோமே; ஆகவே அவனை * ஆர்த்தத்ராண பராயணனாக நாம் எங்ஙனே அறுதியிட முடியும்? என்று ஆக்ஷேபங்கள் செய்கிறார்கள். இவர்களின் அவிவேகத்தை நாம் எங்ஙனே போக்கமுடியும்? ஆனாலும் போக்குகிறோம். அவ்வப்போதுகளில் ஆபத்துக்களில் நின்றும் நாம் விடுபட்டு ரக்ஷைபெறுகிறோமென்பதை ஒப்புக்கொண்டாகவேண்டும். இந்த ரக்ஷணம நாமே செய்துகொள்வதேயன்றி எம்பெருமான் செய்வதன்று என்று நினைப்பதானது அவிவேகம். அப்பெருமானோ கண்ணுக்குப் புலப்படுகிறவனல்லன். ஏன் புலப்படுவதில்லையென்பதுபற்றின விசாரம் தனிப்பட்டது. அதுநிற்க. அவன் கட்கிலியாயிருந்துகொண்டும் தன்னுடைய ரக்ஷணத்தொழிலை விடாதவனாகவேயுள்ளான். ஒரு மஹாப்ரபு ஒருவர்க்கு ஒன்று கொடுக்க நினைத்தால் அதைத் தானே நேராகக் கொடுக்கிறானென்பதில்லை. மந்திரி மூலமாகவோ மற்றொரு சேவகன் மூலமாகவோதான் கொடுக்கக் காண்கிறோம். ஆனாலும் கொடுப்பவன் ப்ரபுதான் என்பதில் ஐயமில்லை. இதுபோலவே நம்முடைய ரக்ஷணத்தை ஸகல ஜகத் ப்ரபுவான ஸ்ரீமந்நாராயணனே செய்து போருகிறான். அப்பெருமான் செய்யும் ரக்ஷணம் அத்வாரகம் ஸத்வாரகம் என்று இருவகைப்படும். தானே ஸாக்ஷாத்தாகச் செய்வது அத்வாரகமெனப்படும். தாய் தந்தையர் மூலமாகவும் மற்றும் சிலர் மூலமாகவும் செய்வது ஸத்வாரகமெனப்படும். "ஈச்வரனை யொழிந்தவர்கள் ரக்ஷகரல்லரென்னுமிடம் ப்ரபந்நபரித்ராணத்திலே சொன்னோம்" என்பது பிள்ளை லோகாசாரியருடைய திவ்யஸூக்தி. ப்ரபந்ந பரித்ராணமென்பது சிறியதொரு நூலே; அதை ஸேவித்துத் தெளிவு பெறலாம.

88. ஆருரோஹ ரதம் ஹ்ருஷ்டச் சத்ருக்நோ ஸமந்வித:.

ஸ்ரீராமாயணத்தில் பரதாழ்வான் தசரதசக்ரவர்த்தியின் சரமக்ரியைகளை நிறைவேற்றிவிட்டுச் சித்ரகூடத்தேறப் புறப்பட்டான். புறப்படும்போது மூன்று வகையான அபிப்ராயங்கள் கொண்டிருந்தனன். (1) பெருமானைத் திருவயோத்திக்கு எழுந்தருளப்பண்ணிக் கொண்டு வருவது. (2) அவர் மீண்டெழுந்தருள வில்லையென்றால் இளையபெருமாளோடு கூடத் தானும் உடன் செல்வது. (3) அதற்கும் இசையவில்லை யென்றால் ப்ராயோபவே

ஸம் செய்து முடிவது. இங்ஙனம் மூன்று வகையான அபிப்ராயங்கள் கொண்டு புறப்பட்டான். இம்மூன்றில் ஒரு வகையான கருத்தும் நிறைவேறவில்லை யென்பது ஸ்பஷ்டம். * ஸ காம உநவாவெ்யூவ—ஸ காமமநவாப்யைவ* என்று ஸ்பஷ்டமாகவே ஸம்க்ஷேபராமாயணத்தில் சொல்லிற்று. இப்படியிருந்தும் * ஆருரோஹ ரதம் ஹ்ருஷ்ட:* என்று, சித்திரகூடத்திலிருந்து வெகு சந்தோஷமாகத் தேரேறித் திரும்பினார் பரதாழ்வான்—என்று சொல்லப்பட்டுள்ளது. இங்கு ஸந்தோஷத்திற்கு ப்ரஸக்தியேது? என்று விமர்சிக்க ப்ராப்தமாகிறது. இங்கு தத்துவம் கேண்மின். ஸ்வரூபத்தில் சேஷத்வம் பாரதந்திரியம் என்று இரண்டு; சேஷத்வத்திற்காட்டில் பாரதந்திரியம் மிகச்சிறந்ததென்பது ப்ரஸித்தம். சொன்னசொல் தவறாது கட்டளைப்படி யொழுகுதல் பாரதந்திரியமென்க. இளையபெருமாள் கூடவே யிருந்து அத்தாணிச் சேவகஞ் செய்தாரென்கிற பெருமையைப் பெற்றவரேயாயினும் பெருமாளுடைய கட்டளைப்படி யொழுகினாரல்லர். காட்டுக்குப் புறப்படும்போது நீ கூட வரவேண்டாமென்றார். அதைக் கேட்கவில்லை. காட்டிலிருந்து ஸுமந்திரர் தேருடன் திரும்பும்போதும் தேரிலேயே அயோத்திசென்று சேருமாறு வற்புறுத்திக் கூறினார். அதையும் கேட்கவில்லை. ஆகவே இளையபெருமாளுக்குப் பாரதந்திரியத்தில் அந்வயமில்லை யென்று தேறிற்று. பரதாழ்வான் அப்படியல்லாமல் தனக்கு பாரதந்திரியம் ஸித்தித்ததே யென்று ஸந்தோஷமடைந்தான். ஆனது பற்றியே * ஆருரோஹ ரதம் ஹ்ருஷ்ட:* என்றது.

## 89. ஆக்க்யாஹி மம தத்வேந ராக்ஷஸாநாம் பலாபலம்.

ஸ்ரீ வசநபூஷணத்தில் "விபீஷணனை ராவணன் *குலபாம்ஸந மென்றான்; பெருமாள் இக்ஷ்வாகு வம்ச்யனாக நினைத்து வார்த்தை யருளிச் செய்தார்" என்பது (228) ஒரு சூர்ணிகை. பாபிஷ்டனான ராவணன் தனக்கு ஹிதோபதேசம் பண்ணின தர்மாத்மாவான ஸ்ரீவிபீஷணாழ்வானை "த்வாம் து திக் குலபாம்ஸநம்" என்று இக்குலத்துக்கு இழுக்காகப் பிறந்த நீ தொலை—என்று வெறுத்துத் தள்ளிவிட்டது ஸ்பஷ்டமாகக் காண்கிறது. அந்த விபீஷணாழ்வானைப் பெருமாள் இக்ஷ்வாகு வம்ச்யனாக நினைத்து வார்த்தையருளிச் செய்ததாக ஸ்ரீராமாயணத்தில் எங்குத் தெரியவருகிறதென்று சில ஜிஜ்ஞாஸுக்கள் கேட்பதுண்டு. கேண்மின்; பெருமாள் விபீஷணாழ்வானை அங்கீகரித்தருளின பிறகு அவனோடு அளவளாவும்போது "ஆக்க்யாஹி மம தத்வேந ராக்ஷஸாநாம் பலாபலம்—ஆக்க்யாஹி மம தத்வேந ராக்ஷஸாநாம் பலாபலம்" என்று கூறியுள்ளார். இங்கு வார்த்தை எப்படியிருக்கவேணுமென்றால், உங்களினத்தவர்களின் பலாபலத்தை எனக்கு உள்ளபடி சொல்லென்றிருக்கவேணும். "த்வதீயாநாம்" என்றோ "யௌஷ்மாகாணாம்" என்றோ பதப்ரயோகமிருந்திருக்கவேணும். அப்படியன்றிக்கே "ராக்ஷஸாநாம்" என்றிருக்கிறது. ராக்ஷஸ ஜாதீயனானவனை நோக்கிப் பேசும்போது இங்ஙனே பதப்ரயோகமிருக்கத் தகாது. இருப்பதனால் விபீஷணாழ்வானை ராக்ஷஸ ஜாதீயனாக நினையாதே திருத்தம்பிமாரோபாதியாக அபிமானித்தமை விளங்கிற்று. மேலே எடுத்துக்காட்டின ஸ்ரீவசநபூஷண ஸ்ரீஸூக்தியிலே ராவணன் பரித்யஜித்தமையும், பெருமாள் பரிக்ரஹித்தமையும் சொல்லுகையாலே ஸஹவாஸாநுகூல்ய முண்டாகவே ப்ராக்ருதர்கள் கைவிடுவார்களென்னுமிடமும், பகவான் விரும்பி மேல் விழுந்து பரிக்ரஹிக்குமென்னுமிடமும் தெரியவருகின்றது.

90. ஆநயைநம் ஹரிச்ரேஷ்ட! தத்தமஸ்யாபயம் மயா.

*ஸ்ரீ விபீஷணாழ்வான் ராவணனுக்கு எவ்வளவு உபதேஶம் செய்தும் பலனின்றும் காணமையாலும், அவனால் நிராகரித்துத் தள்ளவும் பட்டதனாலும் இலங்கையை விட்டுத் தொலைத்துப் பெருமாளை ஶரணமடைவதாகவோடிவந்து "ஸர்வலோகஶரண்யாய ராகவாய மஹாத்மநே। நிவேதயத மாம் க்ஷிப்ரம் விபீஷணமுபஸ்திதம்—ஸர்வலோகஶரண்யாய ராகவாய மஹாத்மநே, நிவேதயதமாம் க்ஷிப்ரம் விபீஷண முபஸ்திதம்" என்று வானரமுதலிகளிடம் விண்ணப்பம் செய்தபோது ஸுக்ரீவன் முதலானவர்கள் அவனிடத்தில் அதிஶங்கை கொண்டு அவனை ராமகோஷ்டிக்கு ஆளாக்கிக் கொள்ளக்கூடாதென்று பெருமுயற்சி செய்தார்களென்பதும், பெருமாள் விசாரணை செய்து அங்கீகரிப்பதாக ஸித்தாந்தம் செய்தாரென்பதும் யாவருமறிந்ததே. அவனை அங்கீகரிப்பதாக உறுதிகொண்ட பெருமாள் "விபீஷணா! வருக வருக வருக." என்று தாமே அருள்பாடிட்டு அழைத்துக்கொள்ளலாம். அப்படிச் செய்யாமல் அவனைச் சேர்த்துக்கொள்ளவே கூடாதென்று கடுமையாக ஆக்ஷேபித்த ஸுக்ரீவ மஹாராஜரையே விளித்து 'நீர்போய் அழைத்துவாரும்' என்று நியமித்தது எதனால்? அவிரவும் பரமபாகவதோத்தமனான விபீஷணனைப் பற்றி அவமரியாதையாகப் பேசின அந்த ஸுக்ரீவனை "ஹரிச்ரேஷ்ட!" என்று உயர்த்திக் கூறியது எதனால்! என்று கேள்விகேட்க நேரும். இதற்குத் தெரிவிப்பது கேளீர். விபீஷணாழ்வான் தான்வந்து ஆச்ரயிக்கும்போது, கட்டுங்காவலுமில்லாமல் கடற்கரையிலே உலாவிக்கொண்டிருக்கிற பெருமாளை நேராக வந்து ஆச்ரயிக்கலாமாயிருக்கச் செய்தேயும், அது முறைமையன்று என்றும், பாகவத புரஸ்காரமாகவே அடிபணியவேணுமென்றுங் கொண்டு அவன் ஸத்வாரகமாக ஆச்ரயித்தது எப்படி ஶாஸ்த்ரார்த்தமோ, அப்படியே பெருமாள் ஆச்ரிதர்களை அங்கீகரிக்கிறபோதும் தாமே நேராக அங்கீகரித்துவிடாமல் பாகவதபுரஸ்காரமாக அங்கீகரிப்பதும் சாஸ்த்ரார்த்தம். ஆனதுபற்றியே ஸ்ரீவசநபூஷணத்தில் (151,) "இவன் முன்னிடுமவர்களை அவன் முன்னிடுமென்னுமிடம் அபயப்ரதானத்திலும் காணலாம்" என்றருளிச் செய்தது. இங்கு மணவாளமாமுனிகளின் வியாக்கியான ஸ்ரீஸூக்தி வருமாறு—*

> *"இச்சேதநன் தானாச்ரயிக்கும்போது புருஷகாரமாக முன்னிடுபவர்களை அவனும் அங்கீகரிக்கும்போது முன்னிடுமென்னுமிடம் திருவடியையும் ஸ்ரீ குஹப் பெருமாளையும் அங்கீகரித்த ஸ்தலங்களில் மாத்ரமன்றிக்கே ஸ்ரீ விபீஷணாழ்வானை யங்கீகரித்த ஸ்தலத்திலுங் காணலாம். எங்ஙனேயென்னில், * ஸோஹம் பருஷிதஸ் தேந......ராகவம் சரணம் கத:* என்று சரணம் புகுந்து * ஸர்வலோகஶரண்யாய......* என்று நின்ற ஸ்ரீ விபீஷணாழ்வானை அபயப்ரதானபூர்வகமாக அங்கீகரிக்கிற விடத்தில் * ஆநயைநம் ஹரிச்ரேஷ்ட என்று முதலிகளுக்கெல்லாம் மூலபூதரான மஹாராஜரை முன்னிட்டிறே அங்கீகரித்தது"*
>
> *என்று.*

*இங்கே ஸுக்ரீவ மஹாராஜரை ஹரிச்ரேஷ்ட! என்று விளித்தது மிகவும் பொருத்தமானதே; விபீஷணாழ்வானைப்பற்றி ஸுக்ரீவ மஹாராஜர் ஆக்ஷேபித்ததானது அவனிடத்தில் மாச்சரியத்தாலன்று; பெருமாளிடத்தில் மங்களாசாஸன பரதையினால் என்பது தத்துவமாதலாலும், இதைப் பெருமாள் நன்குணர்ந்தவராதலாலும் அந்த கௌரவத்தையிட்டு ஹரிச்ரேஷ்ட! என்றது.*

## 91. ஆத்யஸ்ய ந: குலபதேர் வகுலாபிராமம்.

ஆளவந்தாரருளிச் செய்த ஸ்தோத்ரரத்னத்தில் * மாதாபிதா யுவதயஸ் தநயா விபூதி: * இத்யாதி ச்லோகமானது நம்மாழ்வாருடைய தனியனாக அநுஸந்திக்கப்பட்டு வருகின்றது. நம்மாழ்வாரே இதில் தோத்திரம் செய்யப்படிருக்கிறாரென்பதில் ஸந்தேஹமில்லை. ஆனால், இதில் நம்மாழ்வாருடைய திருநாமம் நிர்தேசிக்கப்பட்டிருக்கவில்லை. * ஆத்யஸ்ய ந: குலபதே:—ஆத்யஸ்ய ந: குலபதே: * என்றதைக்கொண்டு நம்மாழ்வார் விவக்ஷிதர் என்னவேணும். நம்முடைய குருபரம்பரையில் எம்பெருமானே முதல் ஸ்தானத்தில் எழுந்தருளியிருப்பவன். * அஸ்மத் குருப்யோ நம:* என்று ஆரம்பிக்கிற வாக்யகுருபரம்பரையில் * ஸ்ரீதராய நம: * என்றும், * அஸ்மத் தேசிகம் * என்று ஆரம்பிக்கிற சுலோக குருபரம்பரையில் * இந்திராஸஹசரம் நாராயணம் ஸம்ச்ரயே என்றும் தலைக்கட்டியுள்ளதனால் எம்பெருமான் நம்முடைய குலத்திற்கு ஆத்யபதி—தலைவன் என்பதில் ஐயமில்லையே; * மாதா பிதா யுவதய: * இத்யாதியான பூர்வார்த்தமும் எம்பெருமானிடத்திலே ஸம்பந்திதமாகக் குறையில்லை; "சேலேய் கண்ணியரும் பெருஞ் செல்வமும் நன்மக்களும், மேலாத் தாய்தந்தையும் அவரேயினியாவாரே" என்ற திருவாய்மொழியின்படிக்கும் "மாதா பிதா ப்ராதா நிவாஸ: ஶரணம் ஸுஹ்ருத் கதி: நாராயண:" என்ற உபநிஷத்தின்படிக்கும் தாய் தந்தை முதலான ஸகல விதபந்துக்களும் ஸர்வேச்வரனேயாதலால் இந்தச்லோகத்தினால் ஆளவந்தார் ஸர்வேச்வரனையே துதிக்கிறாரென்னலாகாதோ? என்று சிலர் சங்கிக்கக்கூடும். (சங்காபரிஹாரம் கேண்மின்.) ஆளவந்தார் இந்த சுலோகத்தை வெகு சாதுரியமாக அமைத்தருளியுள்ளார். கடைசி பாதத்தில் [illegible]தமாகச் சொல்லப்பட்ட அங்க்ரியுகளத்திற்கு வகுலாபிராமம் என்று விசேஷணமிட்டருளியிருப்பதுதான் வெகு சாதுரியம். திருத்துழாய் மாலையணிந்த தெய்வமன்று இங்கு விவக்ஷிதம்; மகிழமாலையணிந்த மாறன் சடகோபனென்னும் தெய்வமே விவக்ஷிதமென்று காட்டுதற்கே வகுலாபிராமமென்று விசேஷணமிட்டருளினர். "ஆட்செய்தாழிப்பிரானைச் சேர்ந்தவன் வண்குருகூர் நகரான், நாட்கமழ் மகிழ்மாலை மார்பினன் மாறன் சடகோபன்" என்று ஆழ்வார்தாமே தம்மை மகிழ்மாலைத் தெய்வமாகச் சொல்லிக்கொண்டார். வகுளாபரணமுனி: என்றும் வகுளதரயோகீ என்றும் நம்மாழ்வார்க்கேயன்றோ ப்ரஸித்தியுள்ளது. "யஸ்ய ஸாரஸ்வதம் ஸ்ரோத: வகுளாமோதவாஸிதம்" என்ற யதிராஜ ஸப்ததி ஸூக்தியும் இங்கே அநுஸந்தேயம்.

* ஆத்யஸ்ய ந:குலபதே: * என்பதனால் எம்பெருமானே விவக்ஷிதன் என்று கொண்டாலும் குறையில்லை; அவனுடைய வகுளாபிராமமான திருவடி நம்மாழ்வாரேயன்றோ. எம்பெருமானுடைய திருவடி நிலைக்கு ஸ்ரீசடகோபனென்றுதானே திருநாமம். "சேமம் குருகையோ செய்ய திருப்பாற்கடலோ, நாமம் பராங்குசமோ நாரணமோ—தாமம், துளவோ வகுளமோ தோளிரண்டோ நான்கு, முளவோ பெருமானுனக்கு" என்ற மூதுவர் பாசுரத்தின்படி எம்பெருமானுக்கும் ஆழ்வார்க்குமுள்ள அபேதமும் விளங்குமாறு இந்த ச்லோகமருளிச் செய்யப்பட்டிருப்பதுமுணர்க.

முன்னம் மூன்று சுலோகங்களினால் ஸ்ரீமந் நாதமுனிகளைத் துதித்தவர் அவர்க்கு அடுத்தபடியாகவே நம்மாழ்வாரைத் துதிக்க வேண்டியிருக்க, இடையில் பராசர மஹர்ஷியைத் துதித்து அதன் பிறகு நம்மாழ்வாரைத் துதித்திருப்பதானது ஆழ்வாரையும் எம்பெருமானோடு ஐக்கியமாகக் காட்டுதற்கேயென்பது தத்துவம். .... .... (*)

(தொடரும்.)

# தென்திருப்பேரைப் பெரியாருடைய மறைவு

தென்திருப்பேரைப் பெரியார் என்றால் தெரிந்துகொள்ளாதாரில்லை. "தென்திருப்பேரை ராமசந்திரய்யங்கார்" என்று ப்ரஸித்தராய் எழுந்தருளியிருந்த பெரியார் இரண்டு மூன்று வருஷங்கள் வாயுபாதையினால் பீடிக்கப்பட்டு சயனத்திலிருந்தவர் சென்ற ஆடி மாதத்தில் திருநாடலங்கரித்தார். ஆனால் அப்போது நாம் வடநாட்டுத் திருப்பதி யாத்திரையிலிருந்தோம். அப்போதே இச்செய்தி நமக்குத் தெரிவிக்கப்பட்டிருந்தும் தபால் கிடைக்கத்தவறி விட்டது. பிறகு 1—9—61-ல் யாத்திரையை முடித்து நாம் ஸ்வஸ்தானம் வந்து சேர்ந்தபின்புங்கூட ஒரு மாதம் வரையில் இச்செய்தி நமக்குத் தெரியாமலேயிருந்தது வியப்பே. காலாதீதமானாலும் இச்செய்தியை நாம் தெரிவித்து இந்த ஸ்வாமியைப் பற்றிச் சில வரிகளாவது எழுதியே ஆத்மசாந்தி பெற நினைக்கிறோம். ஆனால் இந்த ஸ்வாமியைப்பற்றி நாம் புதிதாக எழுதவேண்டியதுமில்லை. நம்முடைய தன் சரிதை நூலில் (பக்கம் 265-ல்) ஏற்கெனவே யெழுதி வெளியிட்டிருப்பதை அப்படியே உதாஹரிக்கிறோமிங்கு.




ஸ்ரீமதுபயவே K. ராமசந்திரய்யங்கார் ஸ்வாமி
தென்திருப்பேரை.

"ஆழ்வார் திருநகரி நவதிருப்பதிகளைச்சேர்ந்த தென் திருப்பேரையில் வாழ்பவரான K. ராமசந்திரய்யங்கார் ஸ்வாமியின் திருக்குணங்களிலே அடியேன் அறியாக் காலத்திலிருந்தே ஈடுபட்டவன். இந்த ஸ்வாமி லௌகிகமான உத்தியோகத்திலமர்ந்து வாழ்ந்தவர், அதில் வெறுப்புக்கொண்டு சீக்கிரமாகவே விச்ராந்தி பெற்று பகவத்பாகவதாசார்ய கைங்கர்ய நிஷ்டராய் ஸத்க்ரந்த காலக்ஷேப நிரதராக விளங்கி வருகின்றார். இந்த ஸ்வாமியின் உத்தமமான திருக்குணங்களை அவரவர்கள் அநுபவித்து அறியவேண்டுமேயொழிய அடியேனுடைய எழுத்திலிருந்து தெரிந்துகொள்வதில் சுவையில்லை. ஆனாலும் அடியேன் எழுதாமலிருக்கமுடியாது. இவர் உத்தியோகத்திலிருக்கும்போதே அடியேனுக்கு பரிசிதர். பரமவைதிகரான விவர்க்கு லௌகிக உத்தியோகத்திலிருப்பு எங்ஙனே பொருந்துகிறதென்று

அடியேன் கவலை கொண்டதுண்டு. அப்போதே இந்த ஸ்வாமி உத்தியோகத்தைவிட்டு விலகிக்கொண்டார். க்ரமமான பென்ஷன் கிடைப்பதற்கு யோக்யமில்லாத காலத்தில் விலகிக் கொண்டபடியாலே சிறிதளவான பென்ஷன் தொகையே கிடைக்கும்படியாயிருந்தது. இருந்தாலும் அதில் பரம த்ருப்தி கொண்டவராய் ஸத்காலக்ஷேப நிரதராயினர். இயற்கையாகவே குடும்ப யோகக்ஷேம நிர்வாஹத்திற்குப் பர்யாப்தமான உபபத்தியுடையவராதலால் பாகவதர்களை ஆராதிப்பதிலேயே அளவு கடந்த குதூஹலமுடையவராய் அந்நாள் தொடங்கி இந்நாள் வரையில் ஏகரீதியாக விளங்கி வருகிறார். இந்த ஸ்வாமி நமது நம்பிள்ளை ஸன்னிதிக்குச் செய்து போந்தவையும் செய்துவருகின்றவையுமான கைங்கரியங்கள் பல. பழுத்த பழமாக ஸேவை ஸாதித்து வருகின்ற இந்த ஸ்வாமி இவ்விபூதியில் இன்னமும் வெகு நாளைக்கு ஸேவை ஸாதித்துக் கொண்டிருக்கவேணும். ஸ்ரீவைஷ்ணவர் என்னும் வ்யபதேசத்திற்கு இந்த ஸ்வாமி ப்ரதமலக்ஷ்ய பூதர் என்பது அடியேனுடைய அபிஸந்தி.''

இவ்விதமாக ஆறு வருடங்களுக்கு முன்பு எழுதிவெளியிட்டிருந்தேன். பழுத்த பழமென்னும்படியிருந்தவர் வானோர்க்கு ஆராவமுதாக ஆயினர்.

இந்த மஹான் ஆழ்வார் திருநகரி எம்பெருமானார் ஸன்னிதியில் பெரியநம்பியைத் திருப்ரதிஷ்டை செய்வித்தவர் நான்கு வருஷங்களுக்குமுன்பு. இவருடைய மறைவு ஸ்ரீ வைஷ்ணவ உலகுக்குப் பெரிய நஷ்டமேயாகும். பகவத் ஸங்கல்பமென்பது தனிப்பட்டதன்றோ.

## பண்டிதர்களுக்கு அபேக்ஷை

ஹிந்தீ பாஷையில் நன்றாகத் தேர்ச்சி பெற்றவராயும் ஸம்ஸ்க்ருத பாஷையில் ஆழ்ந்த வ்யுத்பத்தியுடையவராயுமுள்ள ஒரு பண்டிதர் தேவை. இதுபோலவே தெலுங்கு பாஷையிலும் ஸம்ஸ்க்ருத பாஷையிலும் தேர்ச்சி பெற்றவொரு பண்டிதரும் தேவை. காஞ்சீபுரத்தில் வந்து வாஸமாக இருக்கவேணும். அதற்கு ஸௌகர்யமில்லையானால் சென்னை டவுனிலுமிருக்கலாம். அச்சிடப்படும் தெலுங்கு—ஹிந்தீ புத்தகங்களை ப்ரூப் கரெக்ஷன் செய்ய வேண்டியது முக்கியமான காரியம். ஸம்ஸ்க்ருதம் அல்லது தமிழிலுள்ள வியாஸங்களை ஹிந்தீ பாஷையிலும் தெலுங்கு பாஷையிலும் மொழிபெயர்க்கவேண்டிய காரியமுமுண்டு. அதற்குரிய யோக்யதை பெற்றவர்கள் தேவை.

இப்பண்டிதர்களின் யோக்யதையை நாம் பரீக்ஷித்து அறிந்தபிறகே சம்பளம் நிர்ணயிக்கப்படும். இப்பண்டித பதவியில் அமர்ந்திருக்க விருப்பமுள்ளவர்கள் சின்ன காஞ்சீபுரம் 29, தென்னண்டை மாடவீதியில் வந்து காட்சி தருக. சென்னையிலுள்ளவர்களாயிருந்தால் சனிக்கிழமை பிற்பகலிலும், ஞாயிற்றுக்கிழமையிலும் ஜியார்ஜ் டவுன் 45, ஸ்ட்ராட்டன் முத்தியாமுதலி வீதி ஜாகையில் சந்திக்கலாம்.

இப்படிக்கு,
P. B. அண்ணங்கராசாரியர்,
25—10—1961.

**Enquire "Who am I"! Know the Self!! And be Free!!!**

# THE YOGA-VEDANTA FOREST ACADEMY

## SIVANANDANAGAR, RISHIKESH, HIMALAYAS, INDIA.

## TAT TWAM ASI

Whereas, by the Grace of God, the Fountain of Eternal Bliss, and by the Will of the Almighty, it has been recognised that **Sri Prathivathi Bhayankaram ANNANGARACHARIAR** is worthy of being awarded THE SACRED TITLE OF **Vyakhyana Vachaspati** in appreciation of meritorious services rendered in the field of **Adtma Pravachanam** and a firm devotion to Truth, Love and Purity, I hereby make this award in token of such recognition, with my best wishes and devout prayers to the Lord to bless the recipient hereof with health, long life, peace, prosperity, Eternal Bliss, success in all undertakings, Vidya, Tushti, Pushti and Divine Aiswarya.

The 21st day of August 1961.

*(Sd.) Swami Sivananda,*

*President.*

ஸ்ரீரஸ்து

# தேவப்பெருமாள் ஸன்னிதி விமர்சம்

(மறுபதிப்பு)

---

ஆசிரியர்

காஞ்சீபுரம் ஜகதாசார்ய ஸிம்ஹாஸநாதிபதி

P. B. அண்ணங்கராசாரியர் சுவாமிகள்

---

## — அன்பர்களுக்கு அறிவிப்பு —

1945 ஆம் வருடத்தில் செட்டிநாடு வாரப் பத்திரிகையில் முதலியாரொருவர் காஞ்சீபுரம் தேவப்பெருமாள் ஸன்னிதி 400 வருடங்களுக்கு முன்பு சிவாலயமாயிருந்ததென்று ஒரு கட்டுரை யெழுதி வெளியிட்டிருந்தார். அதற்கு அப்போதே யுக்தமான மறுப்பு எழுதப்பட்டு அக்காலத்தில் நடந்து கொண்டிருந்த மார்க்கபந்து வென்னும் மாதப்பத்திரிகையில் வெளியிடப்பட்டிருந்தது. பல ஆப்தர்களின் விருப்பத்தின்படி அந்த விமர்சநூல் இப்போது இங்கு மறுபதிப்புச் செய்யப்படுகின்றது.

—ஸ்ரீராமாநுஜன் வெளியீடு.

1961

ஸ்ரீஸ்ரது.

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.

# தேவப்பெருமாள் ஸன்னிதி விமர்சம்

1. செட்டி நாடு வாரப் பத்திரிகையில் ராவ்பகதூர். ப. சம்பந்த முதலியார் **B.A., B.L,** அவர்கள் "சின்னக் காஞ்சிபுரம் வரதராஜஸ்வாமி கோயில்" என்ற தலைப்பின்கீழ் ஒரு வியாஸமெழுதி வெளியிட்டுள்ளார். தேவப்பெருமாள் ஸன்னிதி யென்றும் பேரருளாளன் ஸன்னிதியென்றும் ப்ரஸித்தி பெற்றிருக்கிற காஞ்சீ வரதராஜப் பெருமாள் ஸன்னிதியானது 400 வருஷங்களுக்கு முன்பு சிவாலயமாக இருந்ததென்றும் பிறகு விஷ்ணுவாலயமாக மாற்றப்பட்டதென்றும் தமக்குத் தோன்றிய சிலசான்றுகளைக் கொண்டு நிர்த்தாரணம் செய்திருப்பதாக முடிவு செய் திருக்கிறது இந்த வியாஸம்.

2. இதில் கண்ட காரண நிரூபணங்களில் ஒன்றுகூட விவேகிகளால் ஏற்றுக் கொள்ளத்தக்கதாக இல்லை. உலகம் ஏமாற்றமடையாமைக்காகச் சிறிது விரிவாக வுணர்த்துகிறோ முண்மையை. முதலியாரவர்களின் ப்ரதிஜ்ஞாவாக்கியம் வருமாறு:— "சின்னக் காஞ்சீபுரத்தில் முக்கியமான தேவாலயம் ஸ்ரீவரதராஜப் பெருமாளுடைய தாம். இது வைஷ்ணவர்களுக்குத் தற்காலம் ஒரு பெரிய முக்கியமான யாத்திரா ஸ்தலமாயிருக்கிறது. ஆயினும் இத் தேவாலயமானது ஆதிகாலத்தில் சிவஸ்தலமா யிருந்தது என்பது என் அபிப்பிராயம். அக்கோயில் சீர்ணமாகிப் போனபிறகு விஷ்ணுவாலயமாக மாற்றப்பட்டதென்பதற்குப் பல ஆதாரங்கள் உள. அவைகளை இங்கே எழுதுகிறேன்" என்று.

இந்த பிரதிஜ்ஞைக்குச் சார்பாகச் சில காரணங்களை யெழுதியுள்ளார். அவை சிறிதும் சுவையற்றவையாயும் பெரிதும் பொய்யாயு முள்ளன.

3. முதலியார் எழுதுகிறார்:—"ஸ்ரீவரதராஜஸ்வாமி கோவிலில் கவர்ன் மெண்டாரிடமிருந்து மோஹினிப்பணம் வருஷா வருஷம் வாங்கும்பொழுது ரசீது கொடுப்பதில் இக்கோயில் ஸ்வாமிக்கு 'ஏகாம்பரவரதன்' என்கிற பெயரினாலேயே ரசீது கொடுக்கிறார்கள். இதற்குக் காரணம் அவர்கள் சொல்லுவார்களானால் இந்த ஆராய்ச்சிக்கு மிகவும் பயன்படும்" என்று. இவ்விஷயம் உண்மைக்குமாறானது. மோஹினிப்பணம் வாங்கும்போது 'ஸ்ரீதேவராஜஸ்வாமி தேவஸ்தானத்திற்குச் சேரவேண்டிய தொகை' என்றே ரசீது கொடுத்துவருகிறார்கள். ஏகாம்பரவரதன் என்கிறபெயர் ஒரு ரிகார்டிலும் காட்டமுடியாததே. அப்படியிருந்தால் அச்சொல்லுக்கு ஒரு அர்த்தமும் தேருது. ஏகாம்பரநாதருடைய ஆலயம் வரதராஜருடைய ஆலயமாக மாறிவிட்டதென்று இவர்தாமும் எழுதவில்லையே. ஏகாம்பரநாதராலயம் மேற்கே தனிப்பட நாளைக்கும் திகழாநின்றது.

4. முதலியார் ஒரு பெரிய விஷயமெழுதுகின்றார். அதாவது. "நாலாயிரப் பிரபந்தத்தில் ஸ்ரீவரதராஜருக்கு ஒரு பாசுரமும் கிடையாதென்று அனேக வைஷ்ண வர்கள் ஒப்புக் கொண்டிருக்கின்றனர். சிலர் 'அத்தியூரான்' என்னும் பாட்டு ஸ்ரீவரதராஜரைக் குறிப்பதாகக் கூறுகின்றனர். அதிலும் வரதராஜனென்னும் பெயர் இல்லாமையைக் குறிக்க. வைஷ்ணவர்களுடைய முக்கியமான 108 திருப்பதி களுள் காஞ்சீபுரத்தில் பல இருக்கின்றன. அவைகளுக்கெல்லாம் பல வைஷ்ணவ ஆழ்வார்கள் மங்களா சாஸனம் செய்திருக்கின்றனர். சிறிய கோயில்களுக்குக் கூட அவ்விதமிருக்க, அவற்றுளெல்லாம் மிகப் பெரிய கோயிலாகிய ஸ்ரீவரதராஜப் பெருமாள் கோயிலில் வீற்றிருக்கும் ஸ்ரீவரதராஜப் பெருமாளுக்குமாத்திரம் ஒன்று

யில்லாதது மிகவும் நன்றாய் கவனிக்கவேண்டியது. இக்கோயிலுக்கு ஏறக்குறைய 100 கஜ தூரத்திலுள்ள திருவெஃகாவில் வீற்றிருக்கும் சொன்னவண்ணஞ் செய்த பெருமாளுக்கு ஆழ்வார்கள் பலபாசுரங்களைப் பாடி மங்களா சாஸனஞ் செய்திருக்க, அதற்கு மிகவும் அருகாமையிலுள்ள ஸ்ரீவரதராஜரைமாத்திரம் அவர்களெல்லாம் மறந்துபோனது ஏனோ?'' என்று.

5. இவற்றுக்கு நாம் விரிவாகவே பதிலுரைக்க வேண்டியிருக்கின்றது. நாலாயிரப் பிரபந்தத்தில் ஸ்ரீவரதராஜருக்கு ஒரு பாசுரமுமில்லையென்று எந்த வைஷ்ணவரிடம் முதலியார் கேள்விப்பட்டாரோ அறியோம். பலபாசுரங்களுள்ளன. உலகப் பிரசித்தரான பிள்ளைப்பெருமாளையங்கார் நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி பாடியிருக்கிறரென்பது யாவருமறிந்தது. முதலில் அதைக்கொண்டு எளிதாக உண்மையுணரலாம். அதில் "அருளாளன் கச்சித் திருப்பதியா மத்தியூர்க் கண்ணன் தாள் இச்சித்திருப்ப தியாமென்று" என்கிற செய்யுள் முதலியாருடைய-மருளை நன்கு நீக்கவற்று. ஆழ்வார்களின் மங்களாசாஸனம் பெறாத பெருமாளுக்கோ தலத்திற்கோ ஐயங்கார் பாசுரம் பாடமாட்டாரென்பது திண்ணம். அருளாளன் என்பது ஸ்ரீவரதராஜருடைய திருநாமமே யென்பது விவாதமற்ற விஷயம். பேரருளாளனென்றும் அருளாளனென்றும் நூல்வழக்கிலும் உலகவழக்கிலும் ஸ்ரீவரதராஜரே குறிக்கப்பட்டு வருகின்றார். இப்பெருமானுக்கு ஆழ்வார் பாடலுண்டென்பதை 800 வருஷங்களுக்கு முன்பு வாழ்ந்த திவ்வியகவி பிள்ளைப்பெருமாளையங்கார் மூதலித்தாராயிற்று.

6. ஆழ்வார்பாசுரத்தில் வரதராஜரென்னும் பெயர் இல்லையென்று ஒரு குறை கூறுகின்றார் முதலியார். அந்தப் பெயர் உள்ளதா இல்லையா என்பதை அடுத்தபடியாக விமர்சிப்போம். இல்லை யென்று வைத்துக் கொண்டு முதலில் வாதம் நிகழ்த்துவோம். ஆழ்வார்கள் எங்கும் தலத்தைப் பாடுகின்றவர்களேயல்லது எம்பெருமான் திருநாமத்தைக் குறிப்பிட்டுப் பாடும் விரதமுடையரல்லர். காஞ்சீபுரத்தில் விஷ்ணுஸ்தலங்கள் பல இருப்பதாகவும் அவற்றுக் கெல்லாம் பல பாசுரங்களிருப்பதாகவும் எழுதியுள்ள முதலியார் ஆங்காங்கு எம்பெருமானது திருநாமம் பாடப்பட்டிருக்கிறதா வென்பதைச் சிறிது கவனிக்கவேண்டும். திருவெஃகாவில் சொன்னவண்ணஞ் செய்த பெருமாளெழுந்தருளி யிருப்பதாகவும் அவர்க்கு ஆழ்வார்கள் பல பாசுரங்கள் பாடியிருப்பதாகவும் இவரே எழுதுகின்றார். சொன்னவண்ணஞ் செய்த பெருமாளென்கிற திருநாமம் ஒரு பாசுரத்திலாவது பேசப்பட்டுள்ளதா? உலகளந்த பெருமாள், பாண்டவதூதர், வைகுண்டப் பெருமாள் முதலான எம்பெருமான்களின் திருநாமங்களைப் பற்றியும் இவர் ஆராய்ச்சி செய்யவேண்டியது அவசியமே. அந்தத் திருநாமங்களும் பாசுரங்களில் ஏறியிருக்கவில்லை.

7. சில தலங்களில் எம்பெருமான்களின் திருநாமங்களையும் ஆழ்வார்கள் குறிப்பிடுவதுண்டு. அந்த ரீதியில் வரதராஜப் பெருமாளுடைய திருநாமமும் திருமங்கையாழ்வாரால் செவ்வனே குறிப்பிடப் பட்டிருக்கின்ற தென்பதை அருளிச்செயல் வல்லார் அறிவார். பெரிய திருமொழியில் (2-9-3) "வரந்தருமாமணி வண்ணனிடம் மணிமாடங்கள் சூழ்ந்தழகாயகச்சி" என்றது காண்க.

8. மேலும், கச்சி யென்கிற சொல்லானது வரதராஜர் கோயிலுக்கே சிறப்பாகவுரிய திருநாம மென்பதை நம் முதலியார் முக்கியமாகத் தெரிந்து கொள்ள வேண்டும். காஞ்சீ என்கிற வடசொல்லே தமிழில் கச்சியென விகாரப்பட்டுள்ள தென்பது யாவருமிசைந்தது. "க இதி ப்ரஹ்மணோ நாம தேந தத்ராஞ்சிதோ ஹரி:. தஸ்மாத் காஞ்சீதி-விக்க்யாதா புரீ புண்ய விவர்த்திநீ" என்கிற புராண வசனத்தின்படி காஞ்சீ என்கிற சொல்லானது 'நான்முகக் கடவுளால் ஆராதிக்கப்பட்ட நாராயணமூர்த்தி யெழுந்தருளி யிருக்குமிடம்' என்கிற பொருளையுடையது,

அந்த பகவான் ஸ்ரீ வரதராஜரே யென்பது நிர்விவாதம். ஆகவே, கச்சி யென்னும் சொல்லைப் பிரயோகித்துள்ள ஆழ்வார்களும் மற்றுள்ள சிவபக்தர்களும் ஸ்ரீ வரதராஜப்பெருமாள் கோயிலைப் பேசினவர்களேயாவர். தலைமையான இத்தலத்தின் கீழ் மற்றுள்ள கோயில்கள் இருப்பதனுல்தான் 'கச்சி வெஃகா' 'கச்சி வேளுக்கை' 'கச்சி ஊரகம்' 'கச்சியட்டபுயகரம்' என்றிப்படி பாடியுள்ளார்கள். 'கச்சி யேகம்பம்' என்று பாடின சைவர்களும் ஸ்ரீ வரதராஜப் பெருமாளுடைய தலைமையை இசைந்தே நின்றூர்களென்று இசைந்து தீரவேண்டும்.

9. ஆக இவ்வளவாலும் நாம் நிரூபித்தது, வரதராஜர்க்கும் ஆழ்வார் பாடல் செவ்வனே யுண்டென்பதும், வரதராஜரென்கிற திருநாமமும் ஆழ்வார் திருவாக்கில் புகுந்திருக்கின்றதென்பதும்.

10. வரதராஜர் என்கிற திருநாமம் போலவே தேவராஜர் என்கிற திருநாமமும் இப்பெருமானுக்குப் பிரசித்தம்; அத்திருநாமத்தையிட்டும் நம்மாழ்வார் பாடியுள்ளார். "இமையோர் தலைவா!" "அயர்வறும் அமரர்களதிபதி" என்கிற பாசுரங்களைப்பற்றி ஸம்பிரதாயம்வல்ல பெரியார் பக்கலில் முதலியார் கேட்டுணர்க.

11. "காஞ்சீபுரமென்பது தென்னிந்தியாவிலுள்ள மிகவும் புராதனமான ஓர் பட்டணம். அது குறைந்த பக்ஷம் இரண்டாயிரம் வருடங்களாக இருக்கப்பட்ட பட்டணங்களிலொன்றூகும்" என்று முதலியார் எழுதியுள்ளார். இதனுல் (இவருடைய இசைவின்படியே) இரண்டாயிரம் வருஷகாலமாக வரதராஜருடைய ஆலயமுண்டென்பது விளங்கியே தீரும். காஞ்சீ என்கிற பெயருக்கும் வரதராஜராது ஆராதனைக்கும் உள்ள தொடர்பு ஒழிக்க வொழியாததன்றே. வரதராஜரைப் பற்றியே காஞ்சீ என்கிற திருநாமம் தோன்றிற்றென்பதை முதலியார் சிக்கனக் கொள்ளவேணும். மறக்கலாகாது. மறுக்கவியலாது.

12. இக்காஞ்சீ பட்டணமானது பெரிய காஞ்சீபுரமென்றும் சின்ன காஞ்சீபுரமென்றும் இரண்டு பிரிவாகப் பிரிக்கப்பட்டிருப்பது சென்ற சிலவாண்டுகளாகவேதான் என்றும், முன்பு இவ்வாறாகப் பிரிக்கப்பட்டில்லை யென்றும் முதலியார் எழுதுகின்றூர். இந்த வாதத்தினுல் இவர்க்கு ஸித்திக்கக் கூடிய பயன் ஒன்றுமில்லை. சின்னகாஞ்சீ புரமென்கிற வ்யவஹாரம் 600 வருஷங்களுக்கு முன்னமேயிருந்ததென்பதை நாம் பிரமாணங்கொண்டு நிரூபிக்கவல்லோம். ஸ்ரீமத் வேதாந்த தேசிகர் இயற்றியருளின ஸங்கல்பஸூர்யோதய மென்னும் நாடகத்தில் "துண்டீரம் மண்டலம் மே" என்ற சுலோகத்தை முதலியார் வல்லார்வாய்க் கேட்டுணர்க. அதில் "க்ஷுத்ர காஞ்சீ" (சின்ன காஞ்சீபுரம்) என்றுள்ளது.

13. வரதராஜருடைய ஸன்னிதி கிழக்கு நோக்கியிராமல் மேற்கு நோக்கியிருப்பதைக் கொண்டு பெரிய பிரஸங்கம் செய்கிறூர் முதலியார். சொன்னவண்ணம் செய்த பெருமாள் ஸன்னிதியாகிய திருவெஃகாவைப்பற்றி விசேஷமாகப் பிரஸ்தாவம் செய்திருக்கிற முதலியாரே அந்த ஆலயம் கிழக்கு முகமோ மேற்கு முகமோ? என்று ஆராயட்டும். அதை இவர் தெரிந்து கொண்டாரா? அதுவும் முன்பு சிவாலயமாயிருந்து பிறகு விஷ்ணுவாலயமாக மாற்றப்பட்டதென்றே இவருடைய கொள்கையோ? எத்தனை சிவாலயங்கள் மேற்கு நோக்கி யிருக்கின்றன வென்பதையும் தெரிந்து கொள்ளவேண்டும். எடுத்துக் கழிக்கவும் தகாத இத்தகைய காரணங்கள் சிலவற்றை முதலியார் எழுதியுள்ளார். இவற்றுக்கு ஸ்ரீரங்கம் பார்த்தசாரதி ஐயங்கார் எழுதியுள்ள சுருக்கமான சமாதானமே போதுமென்று விடுக்கின்றூேம்.

14. "ஸ்ரீராமாநுஜர்காலத்தில் கூட இக்கோயில் கிழக்குப் பார்த்ததாய்த்தான் இருந்ததென்பதற்கு ஸ்ரீராமாநுஜருடைய மடம் கிழக்கு கோபுரத்தின் பக்கம்தான் அமைக்கப்பட்டிருக்கிறதென்பது ஒரு அத்தாட்சியாகும்." என்கிறூர் முதலியார். அறி

வுடையார் இந்த வாதத்தை மிகநன்றாகக் கவனிக்கவேண்டும். ஸ்ரீராமாநுஜருடைய காலம் இற்றைக்கு ஏறக்குறைய ஆயிரம் வருஷமாகிற தென்பது அனைவருமிசைந்ததே. அவர் காஞ்சீபுரத்தில் வாழ்ந்தாரென்பதையும் கிழக்குக் கோபுரத்தருகில் மடம் கட்டிக்கொண்டு அதில் வாழ்ந்தாரென்பதையும் முதலியார் தாம் நேரில் கண்டவரல்லர்; சில புத்தகங்களின் ஆதாரத்தைக்கொண்டே அறிந்தவராதல் வேண்டும். அந்தப் புத்தகங்களிலேயே ஸ்ரீராமாநுஜர் காஞ்சீபுரியில் வாழ்ந்துகொண்டு இன்ன காரியம் செய்து வந்தாரென்பதும் ஸ்பஷ்டமாகக் கூறப்பட்டுள்ளது. ராமாநுஜர் சாலக்கிணற்றிலிருந்து நாடோறும் திருமஞ்சனம் கொணர்ந்து வரதராஜருக்கு ஸமர்ப்பித்து வந்தாரென்றும் அக்காலத்திலிருந்த திருக்கச்சி நம்பிகள் வரதராஜருக்கு அத்தாணிச் சேவகம் செய்து வந்தாரென்றும் எழுதப்பட்டுள்ள சரித்திரம் இவரால் நம்பப்படுகிறதா இல்லையா என்று கேட்கிறோம். நம்புகின்றிலே னென்பராகில் ராமாநுஜரைப்பற்றின பேச்சே இவர் எடுக்கத்தகாது; நம்புகின்றே னென்பராகில் 400 வருஷங்களுக்குமுன்பு இது சிவாலயமாக இருந்ததென்கிற இவரது கொள்கை தன்னடையே தொலைந்ததாயிற்று.

15. ஆழ்வார்களின் பாடலைப்பற்றி இவர் விசாரம் செய்வது கிடக்கட்டும்; ஆளவந்தார் திருக்கச்சிநம்பி கூரத்தாழ்வான் வேதாந்ததேசிகர் மணவாளமாமுனிகள் முதலான ஆசாரியர்கள் வரதராஜப்பெருமாளைப் பற்றியும் பெருந்தேவித் தாயாரைப்பற்றியும் எவ்வளவு துதிகள் இயற்றியுள்ளார்களென்பது இவர்க்குத் தெரியுமோ? பல்லடசதகம் கேள்விப்பட்டிருக்கமாட்டார். அவ்வாசிரியர்களின் காலம் இற்றைக்கு எத்தனை நூற்றாண்டுகட்கு முற்பட்டது தெரியுமோ? ஒன்றையும் தெரிந்துகொள்ளாது 400 வருஷங்களுக்கு இப்பால்தான் வரதராஜர் இங்குவந்து புகுந்தாரென்று எழுதுவது என்ன துணிவோ?

16. ஆளவந்தார் முதலான ஆசாரியர்களும் 400 வருஷங்களுக்கு இப்பால் தான் தோன்றினார்கள் என்றோ, பிற்காலத்தவர்கள் சில துதிகளை யெழுதி முற்காலத்தவர்கள் இயற்றியதாக ஏறிட்டார்களென்றோ இனி முதலியார் வாதிக்கவேண்டியதாகும். இத்தகைய வாதத்திற்கும் இடமில்லாதபடி இவர் ஸ்ரீராமாநுஜரைப் பிடித்திழுத்து விட்டிருக்கிறார். ராமாநுஜர் காஞ்சீபுரத்தில் எப்போது வாழ்ந்ததாக இவருடைய கொள்கை? அஃதாவது வெளிவரட்டும். அவர் காஞ்சீபுரத்தில் என்ன தொண்டுசெய்து வந்தாரென்பதையும் வெளியிடட்டும்.

17. இனி முதலியார் ஒன்று சொல்லலாம்; "400 வருஷங்களுக்கிப்பால் என்று நானெழுதியது தவறு; ஆயிரம் வருஷங்களுக்கிப்பால்" என்று திருத்திக் கொள்ளுங்கள் "—என்னலாம். இந்தத் திருத்தத்தை இவர் கைப்பட எழுதி வெளியிட்டான பிறகு அதற்கும் விடையிறுப்போம்.

18. ஸ்ரீவரதராஜர் தமது பிரம்மோத்ஸவத்தில் சின்னகாஞ்சீபுரம் திருவீதிகளில் உத்ஸவம் கண்டருளாமல் பெரிய காஞ்சீபுரத் தெருக்களிலேயே உத்ஸவம் கண்டருள்வது, அங்கேயே பாணவேடிக்கை நிகழ்த்துவது முதலானவற்றிற்கு என்ன காரணம்! என்று கேட்கிறார் முதலியார்.

19. ஒரு வருஷமாவது இவர் அந்த வைகாசி யுத்ஸவத்தின் வைபவங்களை நேரில்வந்து ஸேவிக்கப் பெறுவாராயின் காரணத்தைத் தாமே தெரிந்துகொள்வார். வரதராஜருக்கு நடைபெறும் வைகாசி யுத்ஸவம்போல் இப்பூமண்டலத்தில் மற்றெங்கும் எந்த தெய்வத்திற்கும் உத்ஸவம் நடைபெறுவதில்லை யென்பது மண்ணுலகத்தார் மாத்திரமன்றிக்கே விண்ணுலகத்தாரு முணர்ந்த விஷயம். ஸகல தேசங்களிலிருந்தும் ஸகலத்வீபங்களிலிருந்தும் லக்ஷக்கணக்கான பக்தஜனங்கள் வந்து சேர்ந்து ஸேவிக்கும் மஹோத்ஸவம் இஃது ஒன்றேயென்பது நாளைக்கும் அனுப

வத்திலறியக் கூடியது. அவ்வளவு ஜனத்திரள் அடங்கியிருப்பதற்குக் காஞ்சீபுரம் முழுவதும் வேண்டியிருக்கின்றது. உத்ஸவகாலத்தில் வைணவர்கள் சைவர்கள் ஜைநர்கள் பௌத்தர்கள் என்கிற ஒருவிதமான வாசியுமில்லாமல் ஸகலமதஸ்தர்களும் குதுகலித்துக் குழாங்கூடி வீடுதோறும் வந்து சேர்ந்து நிரம்புகிறார்களென்பதை, வேணுமாகில் முதலியார் நாளது வைகாசித் திருவிழாவில் நேரில் வந்து கண்டுணரலாம். அவ்வளவு ஜனத்திரளுக்கும் ஸேவையளிக்க வேண்டிய பெருமான் பெரிய காஞ்சீபுர வீதிகளுக்கு எழுந்தருள்வதென்கிற பத்ததி பல்லாயிரம் வருஷங்களாக ஏற்பட்டு நடந்துவருகின்றது. கருட ஸேவை ஆனை வாஹனம், குதிரை வாஹனம் முதலிய சில விசேஷோத்ஸவ தினங்களில் மிகமிக அதிகமான ஜனத்திரள் கூடுவதனால் அந்த நாட்களில் மாத்திரம் வெகு தூரத்திலுள்ள அதிகப்படியான (பிள்ளைபாளையம்) வீதிகளுக்கும் எழுந்தருளியாகிறது.

20. வெங்கடகிரி, கத்தவால், வனபர்த்தி, நூஜிவீடு, துனி, பிடாபுரம், பொப்பிலி, மந்தஸா, ஜடப்ரோல் என்று சொல்லப்படுகிற பல பல ஸம்ஸ்தானங்களிலிருந்து ராஜாக்கள் வருஷந்தோறும் இவ்வுத்ஸவாநுபவத்திற்காக வந்திருந்து வாழ்ந்த வீதிகளுக்கு ராஜவீதியென்கிற பெயர் நாளைக்கும் அழியாமலுள்ளது; அப்படிப்பட்ட மஹாப்ரபுக்களும் கண்டு களிக்கவே அந்த வீதியில் பாண வேடிக்கை வாத்யக் கச்சேரி நாட்டியக் கச்சேரி முதலான விசேஷங்கள் ஏற்படுத்தப்பட்டன.

21. சின்னகாஞ்சீபுரம் மாடவீதிகளில் இம்மஹோத்ஸவத்தை நடத்த முடியவே முடியாதென்பதை நாமா சொல்லவேண்டும்? போலீஸ் முதலிய நிர்வாஹ அதிகாரிகளைக் கேட்டால் தெரியவரும். இப்போது நடந்துவரும் யுத்தத்தின் காரணமாக, சென்ற மூன்றுமாண்டில் (1942-ல்) இவ்வுத்ஸவத்தை சின்ன காஞ்சீபுரத்திலேயே நடத்த வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. அப்போது வெளியூர் ஜனத்திரள் இவ்வூரில் புகக்கூடாதென்றும் ரைல்வே கம்பெனியார் டிக்கெட்டுகள் கொடுக்கக் கூடாதென்றும் கடினமான விதிகளை ஏற்படுத்தியே ஒருவாறு இவ்வுத்ஸவம் நிர்வஹிக்கப்பட்டது.

22. பெரிய காஞ்சீபுரத்திற் கெழுந்தருளுகிற காரணத்தை நாம் கூறுவது கிடக்கட்டும். முதலியார் தாம் இன்னது காரணமென்று தெரிவிக்கட்டுமே. ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீரங்கநாதர் தை மாசி பங்குனி சித்திரை மாதங்களில் நான்கு பிரம்மோத்ஸவங்கள் வருஷந்தோறும் அநாதிகாலமாகக் கண்டருளுகிறார். அந்த உத்ஸவங்களில் பெரும்பாலும் நித்தியமும் வெகுதூரமான இடங்களுக்கு எழுந்தருளுகிறார். இதற்கும் முதலியார் காரணவிசாரணம் செய்யவேண்டும். காஞ்சீபுரத்தில் ஏகாம்பரநாதரென்கிற சிவபெருமான் மூன்றாந் திருவிழாவன்று சின்ன காஞ்சீபுரத்திற்கு ஓடி வருகிறாரே இதற்கும் காரணவிசாரம் செய்யவேண்டுமிவர்.

23. மற்றொன்று எழுதுகிறார் முதலியார்—"சாதாரணமாக எல்லாக்கோயில்களிலும் கோயில்ரதமானது கோயிலின் பக்கத்திலிருக்கும்; சின்ன காஞ்சீபுரத்து ஸ்ரீவரதராஜருடைய திவ்ய ரதமானது சின்ன காஞ்சீபுரத்திற்கும் பெரிய காஞ்சீபுரத்திற்கும் மத்தியிலிருக்கிறது. இதற்கொரு காரணம் வேண்டுமன்றோ" என்று. இப்பெரியார் என்னகாரணம் ஊஹிக்கின்றாரோ அதனைத் தாராளமாக எழுதலாமே. எங்கும் ரைல்வேஸ்டேஷன்களிலேயே டிக்கட்டுகள் விற்பனை செய்வது வழக்கமாயிருக்க மதராஸ் பாம்பே முதலான சில நகரங்களில் மாத்திரம் ஸ்டேஷனுக்கு வெகு தூரங்களிலும் டிக்கெட் விற்பனை நடத்துகிறார்களே, இதற்கென்ன காரணம்? என்று ஒருவர் கேட்டிருந்தார். அந்தக் கேள்வியே நமக்கு நினைவுக்கு வருகின்றது. ஸ்ரீவரதராஜருடைய பெருமைக்கும் அவரது வைகாசியுத்ஸவத்தின் பெருமைக்கும் தக்கபடி ரதத்தின் பெருமையும் ஏற்பட்டிருக்கிறது. அந்த ரதம் செல்லக் கூடிய

இடத்தில் அது ஸ்தாபிக்கப் பட்டிருக்கிறது என்பதை இவர் தெரிந்துகொள்ள என்ன அருமையோ ?

24. வரதராஜருடைய ஆலயத்திலுள்ள நூற்றுக் கால் மண்டபமும் பெருந் தேவித் தாயார் ஸன்னிதியும் கோடிகன்னிகாதானம் தாதாசாரியரால் கட்டப்பட்டதாகத் தெரியவருகிறதென்று முதலியார் எழுதுவது முழுமோசமான பேச்சு. இதனால் இவர் வரதராஜர் கோவிலைக் கனவிலும் காணாதவர் என்பதுதான் புலனாகும்.

25. ஏதோ கல்வெட்டுகள் இருப்பதாக எழுதுகிறார். அவற்றை யெல்லாம் ஒன்று விடாமல் எடுத்துப் பிரசுரஞ் செய்து விஷயங்களை நிரூபித்துக் காட்ட ஆற்றலிருந்தால் முன்வருக. எதையும் உள்ளவாறு காணாமலும் காட்டாமலும் சில பாமரர்களை மாத்திரமே மயக்கக் கூடிய வார்த்தைகளை யெழுதுவதனால் ஒரு பலனும் தேராது. இக்கோயில் முன்பு சிவாலயமாக இருந்திருக்குமாயின் இதற்குத் தேவாரப் பாடல்கள் விசேஷமாகத் தோன்றியிருக்குமே. அப்படியொரு பாடலையாவது இவர் காட்ட முன்வருவரோ ?

26. முடிவில் மிகவிந்தையான விஷயமொன்று எழுதுகிறார் முதலியார்—"சுமார் 50 வருடங்களுக்கு முன் இவ்வூரில் வாழ்ந்திருந்த சில வைஷ்ணவ பிராமணர்கள் ஆதியில் இது சிவாலயமாக இருந்ததாகவும் அது பழமையாகப் போன பிறகு விஜயநகரத்தளகர்த்தர் ஒருவருக்குப் பிள்ளையில்லாமலிருக்க இவ்வைஷ்ணவ ஆசார்ய புருஷர்கள் விஷ்ணுவுக்கு ஒரு ஆலயம் கட்டிவைத்தால் பிள்ளை பிறக்குமெனக் கூறியதின் பேரில் இடிந்திருந்த பழைய ஆலயத்தை மலையாக்கி விஷ்ணுப்ரதிஷ்டை செய்ததாகவும் சொல்லக் கேட்டிருக்கிறேன்" என்று. இத்தகைய ஐதிஹ்யங்களை யாரும் எவ்வளவும் கற்பனை செய்யலாம். ஆயிரம் வருஷங்களுக்கு முன் வாழ்ந்த ஆசாரியர்களின் துதிநூல்களும் பல்லாயிரம் வருஷங்களுக்கு முன் வாழ்ந்த ஆழ்வார்களின் அருளிச் செயல்களும் முதலியாரது காதில் விழவும் கண்ணில் படவும் பாக்கியமில்லாத போது, இப்படிப்பட்ட கடைவீதிப் புராணங்கள்தானே இவரது காதில் அவசியம் விழவேண்டும். அவரவர்கள் தம்தம் காதில் விழுவதை யெல்லாம் எழுதிக் கொண்டிருந்தால் அதுவே ப்ரபலப்ரமாணமாய் விடும் போலும் !

27. சைவர்களில் அப்பய தீக்ஷிதரென்பவர் உலகப்பிரசித்தர்; இவர் வாழ்ந்தது 300 வருஷங்களுக்கு முன்பு என்பர். இவர் ஸ்ரீவரதராஜப் பெருமாளை வரதராஜஸ்தவமென்றெழுதிய நூறு சுலோகங்களால் அற்புதமாகத் துதித்துள்ளார். இதை அவர் தாமே தமது குவலயானந்த நூலில் "யதா மதீயே வரதராஜஸ்தவே" என்று அஸக்ருத் உதாஹரிக்கிறார். அந்நூலை நம் முதலியார் ஓராசிரியரிடத்துப் பாடங் கேட்டால் மிகவும் தெளிவு பெறலாம்.

28. முதலியார் இன்னொரு விஷயம் எழுதுகின்றார்—"தற்காலம் ஸ்ரீவரதராஜருடைய விமானத்திற்கு புண்ய கோடி விமானமென்று வைணவர்கள் பெயரிட்டிருப்பதைக் கவனிக்கவும். கோயில் மலைக்கு அத்திகிரியென்றும் பெயரிட்டிருப்பது கவனிக்கத் தக்கது" என்று. ஆம்; இவற்றை நன்றாகவே கவனிப்போம். இக்கவனிப்பினால் இவர் என்ன லாபமடைகின்றாரென்பதுதான் தெரியவேணும். "நமது முதலியாருக்கு ராவ்பகதூர் என்கிற டைடில் இருப்பதை கவனிக்கவும். B. A., B.L, என்கிற பட்டமிருப்பதும் கவனிக்கத்தக்கது. (ப) என்கிற எழுத்து முன்னேயிருப்பது மிகவும் கவனிக்க வுரியது" என்றொருவரெழுதினால் இதற்கு எவ்வளவு பயனோ அவ்வளவே பயன் நம் முதலியாரது மொழிகட்கும்.

29. புண்யகோடி விமான மென்கிற திருநாமம் இவர் கருதுகிறபடி 400 வருஷங்களுக்கிப்பால் ஏற்பட்டதன்று. புராணத்திலேயே ஏற்பட்ட மொழி இது. அதனை 350 வருஷங்களுக்கு முன்பிருந்த வேதாந்த தேசிகரும் தமது நூல்களில்

கையாண்டிருக்கிறார். ஹஸ்திகிரியென்கிற திருநாமமும் இப்படிப்பட்டதே. இன்னமும் பலபல விஷயங்களையும் முதலியார் வல்லார்வாய்க் கேட்டு நன்குணர்ந்து நற்றெளிவு பெறுவது நலம்.

30. நாம் கீழே 4-வது பாராவில் எடுத்துக் காட்டியுள்ள முதலியாருடைய வாசகங்களில் "ஸ்ரீவரதராஜப் பெருமாள் கோயிலில் வீற்றிருக்கும் வரதராஜப் பெருமாளுக்கு" என்றும், "திருவெஃகாவில் வீற்றிருக்கும் "சொன்ன வண்ணஞ் செய்த பெருமாளுக்கு" என்றுமுள்ள வார்த்தைகளைக் காணுமிடத்து இம் முதலியார் காஞ்சீபுரத்தை எட்டிப் பார்த்தவரு மல்லர் என்பது நன்கு விளங்கும். உட்கார்ந்திருக்கும் பெருமாளையே வீற்றிருப்பவராகச் சொல்லவடுக்கும். வரதராஜப் பெருமாள் நின்றதிருக்கோலம். சொன்னவண்ணஞ் செய்த பெருமாள் சயனத் திருக்கோலம். அன்றியும் வரதராஜப் பெருமாள் கோயிலுக்கு 100 கஜம் தூரத்திலுள்ளது திருவெஃகா வென்கிறார். வரதராஜருடைய ஸன்னிதி வீதி மட்டுமே 250 கஜமுள்ளது. ஆக முதலியாரெழுதியுள்ள தெல்லாம் அஸம்பத்த மென்று முடிந்தது. .... .... .... .... .... .... *